# மதி [நாடகம்]

4·9·1953-ல் தோழர்
வ. சீனுவாசனுக்கும், தோழியர்
பெருந்தேவி அம்மையாருக்கும்
நடந்த திருமணத்தின் போது
மணமக்களுக்கு வழங்கிய அன்பளிப்பு
நா. வரதன்




★

தமிழ் மன்றம்
தெப்பக்குளம் திருச்சிராப்பள்ளி

மன்றம் வெளியீடு—5

*முதற்பதிப்பு - நவம்பர் 1951*
*இரண்டாம் பதிப்பு - ஜனவரி 1952*
*மூன்றாம் பதிப்பு - ஜனவரி 1953*



## அறிவிப்பு

இந்த நாடகத்தைப் பெயர் மாற்றவோ, இதில் வரும் வசனங்களை எடுத்துக்கையாளவோ கூடாது.

இந்நாடகத்தை நடிக்க விரும்புபவர்கள் எங்கள் அனுமதி பெற்றே நடிக்கவேண்டும் என்பதைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

**ஆசிரியர்.**

**விலை ரூ.**



*சிட்டி பிரஸ், மதுரை ரோடு, திருச்சிராப்பள்ளி.*

# பதிப்புரை

'மதி' சிந்தனைச் சிற்பி சி. பி. சிற்றரசு அவர்கள் தீட்டிய நாடகம். அவரது அறிவின் அடிவாரத்திலே பதுக்கி வைக்கப்பட்டிருந்த புதையல். அதைவெளியேகொண்டுவருகிறோம்.

முகப்புப் படத்தின் முக்கியத்வத்தைப் பாருங்கள்! மூவர்ணமா முக்கியம்? இல்லை! இதோ! நீதிமன்றத்தில் ஓர் ஒப்புயர்வற்ற அறிஞனை நீதிபதியாக நிறுத்திவிட்டார்கள் நமது ஓவிய நிபுணர்கள். உடை கருப்பு, உள்ளமோ வெள்ளை உள்ளம், ஆம் நெஞ்சிலே நீதித் தராசு! அட்டைப் படத்தைப் பற்றி அவ்வளவு அறிமுகம் போதும். நடமாடும் நந்தவனத்தில் நுழையுங்கள்.

அமரநாதர், ஆளியூர் ஜமீன்தார் சாவின் முனையிலே தன் மகள் சுகுணாவின் வாழ்வுக்கு வேலப்பர் என்பவர் தான் வேலி என்ற முறையிலே உயில் எழுதி வைத்துவிட்டுச் செல்கிறார். ஆனால், அந்த வேலியே பயிரை மேயும் மாடாக ஆகிவிடுகிறது. வேலப்பர் விதியை வேலாகக்கொண்டு சுகுணாவின் வாழ்விலே வீசுகிறார். எய்தவர் மேலேயே பாய்கிறது அந்த விசித்திர வேல்! விதி. நீதிமன்றத்திலேகூட நிறுத்துகிறது நமது மதியை. வெற்றி யாருக்கு? விதிக்கா? மதிக்கா?

படித்துப் பாருங்கள்.

**தமிழ் மன்றத்தார்.**

# நோக்கம்

விதியா, மதியா, எது? மல்லிகாவை விதி அழைத்துச் செல்கிறது, இது அவள் நம்பிக்கை. சுகுணவை மதி அழைத்துச் செல்கிறது, இது இவள் துணிவு. இவர்கள் இரண்டு பேரையும், குலசேகரன் செயல் அழைத்துச் செல்கிறது.

குலசேகரன் ஒருவனுக்கு அக்ரமக்காரனுய், மற்றொருவனுக்கு அனுதாபியா யிருக்கவேண்டிய நிலையில் தராசின் இரண்டு தட்டுகளில் நிற்கிருன். கொலை செய்யத் தூண்டியவன் கோர்ட்டிலேயே மடிகிருன்.

நீதி மன்றத்தில் இரண்டு வக்கில்கள் தவிர வேறு யாரும் பேசவேண்டிய நிலை ஏற்படாத அளவுக்கு நீதி பேசிவிட்டது. நிரபராதி மீண்டாள்.

பணப்பசி, இனப்பசியையும் தாண்டிப் பாதிச நட்டுக் குடிக்கும் லோபி வேலப்பன் பத்தாயிரம் கொடுக்கின்ருன் கொலை செய்ய.

பத்திரத்தின் ஷரத்துகளே அந்தப் பாவியைக் கொன்றுவிட்டது. என்ன உலகம்! படித்துப் பாருங்கள்,

வணக்கம்.

சி. பி. சிற்றரசு.

# மதி

(நாடகம்)

## நடிகர்கள்.

| | | |
|---|---|---|
| அமரநாதன் | .... | ஆளியூர் ஜமீன்தார். |
| சுகுணா | .... | ஜமீன்தார் மகள். |
| வேலப்பர் | .... | சிங்கம்பட்டி மிராசுதார். |
| கண்ணம்மாள் | .... | மிராசுதார் மனைவி. |
| கருணாகரர் | .... | மாஜி ராணுவ வீரர். |
| மரகதம் | .... | வீரர் மனைவி. |
| மல்லிகா | .... | வீரர் மகள். |
| குலசேகரன் | .... | வீரரின் சொந்தக்காரன். |
| மார்த்தாண்டன் | .... | கருணாகரர் அண்ணன் மகன். |
| சிறுத்தொண்டன் | .... | கருணாகரர் மகன். |
| கனிக்கண்ணன் | .... | குலசேகரனுடைய சட்ட விரோதக்குழந்தை. |
| தாசி சாரதா | .... | ஊர் தாசி. |
| வைரமாணிக்கம் | .... | மைனர். |
| தயாபரி | .... | குலசேகரன் தங்கை. |
| வடமலை, வாஞ்சிநாதர் | .... | வக்கீல்கள். |
| வீரன், மாறன் | .... | கொலைகாரர்கள். |

நீதிபதி, ஜூரர்கள், வேலைக்காரன், பிச்சைக்காரன்.
மற்றும் பலர்.

# மதி

## (நாடகம்)

### காட்சி 1

*[அமரநாதர் படுக்கை அறை. தன் மைத்துனர் வேலப்பரிடம் சாசனத்தை ஒப்படைத்துவிட்டு உயிர் விடுகிறார். சுகுணு, கண்ணம்மாள் இவர்கள் துக்கப் படுகின்றனர்.]*

**அமரநாதர் :** அம்மா! இன்னும் கொஞ்ச நேரத்தில்.

**சுகுணு :** என்னப்பா?

**அமர :** எல்லாம் மாமாவிடம் சொல்லியிருக்கின்றேன். அவர் சொல்படி நட.

**சுகுணு :** அப்பா!

**அமர :** இனி தப்பமுடியாதம்மா. தாயின் துணையற்ற உன்னை நானும் கைவிடுகிறேன்.

**சுகுணு :** என் கெதி?

**அமர :** விதிபோல் நடக்கும். இறப்பு மீறமுடியாத கட்டளையம்மா.

**சுகுணு :** கைவிடப்பட்டேனு?

**அமர :** அப்படித்தான் மகளே! கவலைப்படாதே நாங்கள் உன்மேல் செலுத்திய அன்பில்.

**சுகுணு :** கொஞ்சமும் அந்தப்பாமும் காலனுக்கில்லையே !

**அமர :** அவனுடைய கடமை.

**கண்ணம்மாள் :** அண்ணு ! சுகுணு பயப்படுகிருள்.

**வேலப்பர் :** அதற்கு அவர் என்ன செய்வார். அமுதமுது அவரை இம்சிக்காதீர்கள்.

**சுகுணு :** எவ்வளவோ அறிஞர்கள் எதை எதையோ கண்டு பிடித்தார்களே ! சாகாமல் இருக்க ஒரு வழி கண்டு பிடிக்கவில்லையா ?

**வேலைக்காரன் :** உம். இன்னும் குஷ்டரோகத்துக்கே மருந்து கண்டு பிடிக்க வில்லையே ! அம்மா ? யாரும் சாகாமே எப்படியம்மா இருக்க முடியும் ? யாரும் சாகாமலே இருப்பதா வெச்சிகிட்டா, ஒரு அரிசி ஒரு ருபாய்தான்.

## வீட்டின் வெளியே

### டாக்டர், ரிக்ஷாகாரன் தகராறு.

**ரிக்ஷா :** என்னுங்கோ சாமி ! எவ்வளவு நேரமா காத்து கிட்டிருக்கேன் ? இவ்வளவு கொறவா குடுக்கிறீங்கோ.

**வேலைக்காரன் :** ஆமாம். டாக்டரு, கன்ஸல்டிங் பீசு கேட்கிருரில்லே, அவருகிட்டே இவரு வெயிட்டிங் பீசு கேட்கிருரு. எந்தவூருடா நீ ?

**ரிக்ஷா :** வேம்பிடிதாளம்.

**டாக்டர் :** அது எங்கடா அந்தவூரு ?

**வேலைக்காரன் :** அதுவா ? திருபுடதாளம் பக்கத்திலே வேம்பிடிதாளம்.

**டாக்டர்:** என்னுடா? வெயிட்டிங் பீசு?

**ரிக்ஷா:** எம்புட்டு நாழி வாசல்லே காத்துகிட்டிருந்தேன்?

**டாக்டர்:** மூஞ்சியே பாரு இடியெட். நீ மாத்திரந்தான் காத்துக்கிட்டிருந்தாயா? நாங்கூட தாண்டா எத்தனையோ நாளு ரிக்ஷா கிடைக்காமே காத்துக்கிட்டிருந்தேன். அதுக்கு யார்ரா காசு கொடுக்கிறது?

**வேலை:** அதையும் சேர்த்து எங்க எசமான் பில்லுலே போட்டு வாங்கிக்கோங்களேன் சார். ஏதாச்சும் குடுத்தனுப்புங்கோ.

**ரிக்ஷா:** கொஞ்சமான கஷ்டமா? நெஞ்சி வெடிச்சி பூட்ராப்பலே இருக்கு.

**வேலை:** வெடிச்சா என்னுடா? அதற்குத் தான் டாக்டர் இருக்காரே.

**ரிக்ஷா:** சம்பாதிக்கிற பணம் வாய்க்கும் பத்தலே வயத்துக்கும் பத்தலீங்களே.

**டாக்டர்:** பத்தாவிட்டா என்னுடா? வாய் நெறைய பல்லிருக்கு. வயத்து நெறைய கொடலிருக்கு. இப்போ வயத்தே பாத்துதான் சாப்பாடு போடுராங்களா? கார்டெ பாத்துதாண்டா கஞ்சிவூத்தராங்கோ. வாரத்திலே ஒருநாளு பட்டினியாயிரு, எல்லாம் சரியாப்பூடும் போ.

**வேலை:** பாத்தியாடப்பா! டாக்டர் ஆராய்ச்சி.

*[ரிக்ஷா காரனை அனுப்பிவிட்டு உள்ளே சென்று அமரநாதரைப் பரிசோதித்து உயிர் தப்பமாட்டார் என்று தெரிந்தவுடன் மருந்து கொடுக்க மறுத்து விடுகிறார்.]*

**சுகுண:** டாக்டர் சார்! ஏன் முதலைத் ஒருமாதிரியாக வைத்துக் கொண்டிருக்கிறீர்கள்?

டாக்டர்: ஒன்றுமில்லே.

வேலைக்கா: சரிதான்.

சகுண: என்ன, சரிதான்?

வேலை: ஒன்றுமில்லேங்கராரு.

சகுண: என்ன ஒன்றுமில்லே?

வேலை: அப்பாவுக்கு ஒன்றுமில்லே, அவரே நம்பரதிலே யும் ஒன்றுமில்லே, அதிலே பிரயோசனமும் ஒன்று மில்லே. அப்புறம் இந்தவீட்டிலேயும் ஒன்றுமில்லே ங்கராரு.

சகுண: அப்படித்தானு டாக்டர்?

டாக்டர்: வருகிறேன்.

*[அமரநாதர் ஒரு பத்திரத்தை வேலப்பரிடம் கொடுத்து விட்டு, சகுணவை அவர் கையில் ஒப்படைப்பதைப் போல் பாவனைசெய்து இறந்துவிடுகின்ருர்.]*

## காட்சி 2

### அமரநாதர் மைத்துனர் வேலப்பர் வீடு

வேலப்பர்: டேய்! விநயகம்.

விநயகம்: என்னுங்கோ எசமான்?

*[வேலப்பர் விரலைக் காட்டுகின்ருர், விநயகம் ஒரு பிஸ்கத்தைக் கொண்டுவந்து கொடுக்கின்ருன்].*

வேலப்: என்டா, இதையாடா நான் கேட்டேன். சுருட்டே கொண்டு வாடான்னு பிஸ்கத்தை கொண்டு வந்த

குடுக்கிருன். என்னை என்னமோ கொழந்தேன்னு நெனச்சிகிட்டு.

**வினு :** சரிங்கோ.

*[ஒரு புதுசுருட்டே கொண்டுவந்து கொடுக்கிருன்].*

**வேல :** ஏண்டா? இதையாடா கொண்டுவரச் சொன்னேன். பெரிய பண்ணெ முதலாளி, எருமெமாடே! நேத்து ராத்திரி பாதி சுருட்டே அணச்சி தோட்டத்து மாடத்திலே வெச்சிருக்கேன். அதைக் கொண்டுவாடா.

**வினு :** என்னுங்கோ அதைப்போய் கொண்டாரச் சொல்றீங்களே?

**வேல :** ஏண்டா, என்ன அதுக்கு?

**வினு :** ராத்திரியெல்லாம் மழெ பேஞ்சுதுங்களே நனஞ்சுட்டிருக்காது?

**வேல :** நனைஞ்சா என்னடா? நனஞ்சதெ யாரும் உபயோகப்படுத்தறதில்லையா? போடா கழுதெ, அதெ எடுத்துக் கொஞ்சம் அடுப்புத் தட்டிலே வெச்சிக் கொண்டா. குளுருபுடிச்சப் பைய! மழையிலே எவ்வளவோ பேரு நனஞ்சுட்ராங்கோ? அங்கேயா வேட்டி துணிமணி யெல்லாம் அவுத்துப் போட்டு வந்தூடராங்கோ?

*[வினுயகம் அதைக்கொண்டுவந்து கொடுத்தவுடனே மிகக் கஷ்டப்பட்டுக் கொளுத்திக்கொண்டு]*

**வேல :** கண்ணம்மா! கண்ணம்மா!

**கண்ணம்மா :** ஏன்?

**வேலப்பர் :** போயி, அந்த அமரநாதர் எனக்கு எழுதி வெச்சிருக்காரே உயிலு அதைக் கொண்டுவா.

*[கொண்டுவந்து கொடுத்தவுடன்]*

**வேல:** இதிலே என்ன இருக்குது தெரியுமா? இந்தா இதே படி. ஒகோ! உங்கப்பனே கைரேகை, உனக்கு நாக்கிலே மச்ச ரேகை, படிக்கிறேன் கேளு.

1. என் மகள் சுகுணு மைனராயிருப்பதால் என் சொத்துக்களுக்கு தாங்களே கார்டியன் அல்லது வாரிசு.

**வேலப்பர்:** யாரு? நானு! உம், ரெண்டாவது ஷரத்துப் படிக்கிறேன் கேளு.

2. தங்களுக்கும் சந்ததிகள் இல்லாததால், சந்ததிகள் வேண்டுமென்று தாங்கள் விரும்பினுல் என் மகள் சுகுணுவையே திருமணம் செய்துகொள்ளலாம்.

**வேல:** யாரு. நானு? உம், மூணுவது ஷரத்தெ படிக்கிறேன். கேளு.

3. என் மகள் தங்களைத் திருமணம் செய்துகொள்ள மறுக்கக்கூடாது. அப்படி மறுத்தால் என் ஆன்மா சாந்தி அடையாது.

*[குலுங்க நகைத்துக்கொண்டே]*

என் வயதை ஒருவன் குறைத்துவிட்டாலும், என் அதிர்ஷ்ட ரேகையை ஒருவராலும் அழித்துவிட முடியாது. கண்ணு, பார்த்தாயா? படித்ததைக் கேட்டாயா? இனி அமரநாதரின் சொத்துக்கு அதிபதி நான். அவர் மகள் சுகுணுவின் மணவாளன் நான். இந்த இரண்டு குடும்பங்கள், இரண்டு குடும்பங்களின் சொத்துக்கள், இரண்டு மனைவிகள் எல்லாம் டபிள்.

**கண்ணம்மாள்:** (பட்டிக்காட்டுத்தனமாக) அதிலே ராஜா தலே ஒட்டியிருக்கா?

**வேலப்பர்:** உம், உம், அதுக்கு அடுத்தவரு தலையும் ஒட்டியிருக்கு.

**கண்ணம் :** ரெண்டு பெண்டாட்டிங்களா?

**வேல :** ஆமாம்.

**கண்ணம் :** ஏன்?

**வேல :** சொத்து வருதில்லே.

**கண்ணம் :** அப்படின்னு, உங்களுக்கு போடராங்களே கலியாணப் பந்தலு, அதும் பக்கத்திலியே வேறே ஒரு பந்தலும் போடச் சொல்லுங்கோ.

**வேல :** ஏன்?

**கண்ண :** எனக்கும் கொஞ்சம் சொத்து வருது. நானும் ஒரு கலியாணம் பண்ணிக்கிறேன்.

**வேல :** சீ.

**கண்ண :** கம்பீ என்னவேணும். கவனமிருக்கட்டும்.

**வேல :** ஏன்?

**கண்ண :** இப்பொ ரெண்டு பெண்டாட்டியெ கட்டிக்கக் கூடாதாமே?

**வேல :** யாரீ சொன்னு?

**கண்ண :** சர்க்கார் சொல்லுது, சட்டம் ஆமாங்குது.

**வேல :** இதிலேதான் பெரிய சண்டையிருக்குது எனக்கும் சட்டத்துக்கும், வரட்டும் வரட்டும், கிட்டே நெருங்கட்டும், படார்னு சொல்றேம்பாரு. சர்க்காரு, சட்டம் எல்லாம் அப்படியே திண்டாடி நிக்கணும்.

**கண்ண :** அப்படி என்ன அதிர்வெடி போடப் போறீங்கோ.

**வேல .** ஒரே பதில், மூச்சுத் திணறிப் போகாது? திருமணம் என் சொந்த விஷயம், அப்புறம் வாய்திறக்குமா?

**கண்:** சரி, அப்படியே சுகுணுவே இருமணம் செய்துகிட்டுத் தான் என்ன செய்யப் போறீங்கோ ?

**வேல:** சங்கடமான கேள்விதான். என் பலஹீனத்தெ நீயும் தெரிஞ்சிகிட்டிருக்கே, பெண்ணுக்கே இந்தப்பொருமை புத்திதான். தனக்கு உதவியா வேறெ ஒருத்தி வர்ரா ளேனு சந்தோஷப்பட்ரதில்லே. அவள் என் வீட்டில் நுழையும்போதே அந்தச் சொத்துக்களும் நுழையும். அதை மறந்துவிட்டாயே ?

**கண்:** இருக்கிற சொத்து போதாதா ?

**வேல:** ஒருவருக்கு இவ்வளவு சொத்துதான் இருக்க வேணும்னு கணக்கா என்ன ?

**கண்:** அவள் அழகில் சொக்கிவிட்டீர்கள்.

**வேல:** பேதை! அழகை அழகென்று ஒப்புக்கொள்வது குற்றமா என்ன?

**கண்:** ஒப்புக்கொள்வது குற்றமில்லை. ஆனல், அதை அப கரிக்க எண்ணுகின்றீர்கள்.

**வேல:** அது என் இஷ்டமா என்ன? இதோ, இறந்த அமர நாதர் இட்ட கட்டளை. *[என்று உயிலை நீட்டுகிருன்]*

**கண்:** இருதாரத்தைக் கட்டிக்கொண்டவர்கள் யாரும் இன்பம் அடைந்ததில்லை.

**வேல:** எவனுவது கபோதிக்குப் போய்ச் சொல். இப்படிப் பெண்களைக் கேட்டுத்தான் எத்தனையோ குடும்பங்கள் மூழ்கிப்போச்சு.

*[டேய் விநயகம்]*

## காட்சி 3

[கர்ணகடூரபுரம் இரவு]

[கட்டபொம்மன் நாடகம் நடந்துகொண்டிருக்கின்றது.]

மாஜி இராணுவ வீரர் கருணாகரர், அவர் மனைவி மரகதம்மாள், மகள் மல்லிகா — மகன் சிறுத்தொண்டன், ஆகியோர் நாடகம் பார்த்துக் கொண்டிருக்கின்றனர். கொஞ்ச தூரத்தில் மல்லிகாவின் காதலன் — குலசேகரனும் இருக்கின்றான். இருவரும் சைகை செய்து கொண்டு அருகில் உள்ள ஒரு பூங்காவுக்குச் செல்லுகின்றனர்.

நாடகத்தில் கட்டபொம்மன் தோற்றம். வெள்ளையரைப் பழித்துப் பாடிக் கொண்டும், பேசிக் கொண்டுமிருக்கின்றான்]

**மரகதம்மாள் :** [பக்கத்தில் திரும்பிப் பார்த்து மல்லிகாவைக் காணாததால் — மகனை அழைத்து] தம்பி எங்கடா அக்கா ?

**சிறுத்தொண்டன் :** எனக்கென்னம்மா தெரியும் ?

**மரகத :** அப்படி போய்ப் பாரு.

[சிறுத்தொண்டன் சுற்றிலும் பார்த்துக் கொண்டே கடைசியில் பூங்காவில் நுழைந்து இவர்களைப் பார்த்துவிட்டு ஓடுகிறான். இதற்குள் கருணாகரரும்

*மல்லிகா எங்கே என்று விசாரிக்கின்றார்.]*

**கருணு:** எங்கே பொண்ணு?

**மரகத:** பாத்துட்டு வரச் சொல்லி பையனெ அனுப்பியிருக்கேன்.

**கருணு:** உங்களுக்கு அதைவிட என்ன உத்தியோகமாம்.

*[என்று எழுந்து புறப்படப் போகின்றான். அதற்குள் பையனும் வந்து விடுகின்றான்.]*

**கருணு:** எங்கடா அக்கா?

**சிறுத்:** அப்பா. அக்காவும் - எதிர் வீட்டு மாமாவும் பார்க்கிறே, இந்த மாதிரி செய்துகிட்டிருக்காங்கப்பா -

*[என்று கட்டபொம்மன் நாடகத்தில் அப்போது நடந்து கொண்டிருக்கும் காதல் கட்டத்தைக் காண்பிக்கிறான்.]*

*[கருணாகரன் ஓடிப்போய் அவர்கள் இருவரையும் பிடித்துக் கொண்டு]*

**கருணு:** டேய் குலசேகரா? என்ன தைரியம் உனக்கு! துப்பாக்கி பிடித்த கைகளடா இவை. உன்னைத் துண்டு துண்டாக்கிடுவேன். ஒன்றும் தெரியாதவளை வீணுகக் கெடுத்துவிட்டாயே? நேத்து என்னம்மா பாடம் நடக்கிறது என்று கேட்டால், குறளில் காமத்துப் பால் நடக்கிறது என்று சொல்லிச்சு. இதுதான் போலிருக்கு.

*[என்று அவளை அடிக்கப் போகிறான்]*

**மல்லி:** அப்பா!

**கருணு:** நீ மட்டி. இனி என்னை அப்பா என்றழைக்காதே. உன் மானமுள்ள தகப்பன் செத்துவிட்டான். இதோ

நிற்கிருனே. இவன் மானமில்லாதவன். இந்நேரம் உங்களை சுட்டு சாம்பலாக்கியிருக்க வேண்டும். என் தலையைத் தாழ்த்தி விட்டாய். இனி உன்னை என் மகள் என்று சொல்வதை விட, ஒரு மரக் கிளையில் தொங்கலாம்.

குலசேகரா! என் மகளை மறந்து விட்டேன் என்று சொல். இல்லா விட்டால் கொன்று விடுவேன். [என்று வெறியன் போல் குதிக்கின்ருன்.]

**குலசே;** பஞ்சையும் தீயையும் பக்கத்தில் வைத்துவிட்டுப் பத்தக் கூடாதென்கிருர்.

**கருணு:** ஓடிப்போ - என் பெயரைக் கெடுக்க வந்த கழுதையே! தின்ற கொழுப்பு. பெண் குழந்தை என்பதற்காக எவ்வளவு அருமையாக வளர்த்தேன். நீ எருமையாய் விட்டாய். மான மழிந்தது. இந்த கருணுகரன் வெளியே கிளம்பினுல் கடலே கொந்தளித்தது என்பார்கள். இன்று அவர்கள் முன்பு கோழைகாரன் போல் நடக்க வைத்துவிட்டாய். இன்று முதல் 10 நாட்களுக்கு உனக்கு ஆகாரமில்லை. பட்டினியாகச் சாவு, இல்லையானுல் வெளியேறு.

*(அவன் போனபின்)*

**மல்லி:** "பட்டினியாகச் சாவு, இல்லையானுல் வெளியேறு" உணர்ச்சிகளைத் தடுக்கச் சக்தியற்று அதன் சாவக் குழியில் விழுந்து விட்ட எனக்குச் சித்ரவதை. அழகோடு அழகு ஐக்கியமாக அது ஏன்? என்ற கேள்வியை எழுப்பச் சக்தியற்ற எனக்குப் பலிபீடம். என் உடல் மாத்திரமல்ல, உள்ளமும் சேர்ந்து வழுக்கி விட்டதால் நான் அடையப் போகும் தண்டனை ஊரார் ஏசல்.

**சிறுத்:** ஏங்கா அழறே. அப்பா சண்டெ போட்டாரே அதுக்கா? வர வர அப்பா தூஸ் ஆயிட்டாரு.

**மல்லிகா:** சீ இல்லே போடா.

இன்றும் நான் கர்ப்பவதி என்று தெரிந்தால் உயிரோடு விடமாட்டார். இப்போதே தப்பித்தாலன்றி உயிர் வாழ முடியாது. உயிர்தான் எதற்காக? இனி நாம் யாருக்காக உயிர் வாழவேண்டும்? அதோ தோட்டத்தில் மரக்கிளை, தண்ணீர்த் தடாகம், இதில் ஒன்ருவது நம் உயிரைப் போக்காதா?

**மனம்:** மல்லிகா! பதறாதே. நீ இரண்டு கொலைகளைச் செய்கிருய்.

**மல்லி:** இரண்டு கொலைகளா?

**மனம்:** ஆம்.

**மல்லிகா:** ஏது?

**மனம்:** ஆம். உன்னை நீ தற்கொலை செய்து கொள்ளப் போகின்ருய். அதே நேரத்தில் உன் வயிற்றிலுள்ள சிசுவையும் கொல்லப் போகிருய்.

**மல்லி:** அதுவும் ஊராரால் பழிக்கப்பட வேண்டுமா?

**மனம்:** அது உனக்கு எப்படித் தெரியும்?

**மல்லி:** தாயைப்போல் பிள்ளை நூலைப்போல் சேலை என்ற வாசகம் தெரியாதா?

**மனம்:** பைத்தியக்காரத்தனம். வெள்ளை நூல் பலவித வண்ண நூலாவதில்லையா?

**மல்லி:** எல்லையற்ற துன்பம்.

**மனம்:** இன்னும் நீ அதன் எல்லையைக் காணவில்லை.

**மல்லி:** முடிவு?

**மனம்:** வேறு நல்ல முடிவை அடைந்தாலும் அடையலாம்.

**மல்லி:** அதற்காக நான் நடைப்பிணமாய்த் திரியவேண்டுமா?

**மனம்:** அவசரப்படாதே, வாழ்க்கையில் துன்பம் வந்தாலன்றி இன்பத்தைக் காணமுடியாது.

**மல்லி:** துன்பத்தைக் தாங்கும் சக்தி எனக்கில்லை.

**மனம்:** சக்திக்கு மனந்தான் உரம். புயலுக்குப்பின் அமைதி. மறந்துவிடாதே.

**மல்லி:** அறிவேன். ஆனால் இக்கன்னியின் வாழ்வில் ஓர் களங்கம் உண்டாய் விட்டது.

**மனம்:** களங்கம் இல்லாத பொருளே இல்லை. நல்முத்தைத் தாங்கும் கடலில் சுராமீனும் உண்டல்லவா? நீ செய்த பிழைக்காக மாண்டுவிடாதே. உன் வயிற்றில் உள்ள சிசு வெளியானால் நல்ல மார்க்கத்தைத் தேடு. போ.

*(தந்தை உள்ளே நுழைகின்றார்.)*

**கருணு:** ஏய்! மரகதம்! இந்தக் குழந்தைக்குச் சாப்பாடு கீப்பாடு ஒன்றும் போடாதே.

**மரகதம்:** மௌனம்

*[மல்லிகா ஒவ்வொரு சாப்பாட்டிற்குப் பிறகும் வாயில் எடுக்கிறாள்.]*

**மரகதம்:** இந்த வேதனையைவேறே தேடிகிட்டையா அம்மா! இதுவும் தெரிஞ்சு போச்சின்னா, இப்போவே நெருப்பு மெதிச்சவரு மாதிரி குதிக்க ஆரம்பிச்சுடுவாரு.

## காட்சி 4

# [வேலப்பர் வீடு.]

*[வேலப்பர் சுகுணவை அழைத்துத்தன் திரு மண விருப்பத்தை வெளியிடுகின்ருர். நீண்ட காரசாரமான விவாதம்.]*

**வேலப்பர்:** வா சுகுண!

**சுகுண:** வா சுகுண. வாம்மா சுகுண என்றழைத்தால் உங்கள் வாய் முத்து சிந்திவிடுமோ?

**கன்னம்மாள்:** அந்த வாய்முத்தெல்லாம் சிந்தித்தான் ரொம்பொ நாளாச்சே. இப்போ இருக்கிற முத்தெல் லாம் டாக்டர்கிட்டே வாங்கினது.

**வேல:** ஏய்! உள்ளேபோ. ஒரு ஆம்பளேயும் பொம்பளே யும் பேச ஆரம்பிக்கிறபோதே குறுக்கே வந்து விழறே. சுகுண உன்னை அம்மா என்று அழைக்காதற்குக் காரணம் இருக்கிறது.

**சுகுண:** காரணத்தை நான் தெரிந்து கொள்ளாமலா?

**வேல:** அதை சொல்லத்தான் அழைத்தேன். உங்கப்பா இறந்தப்போ எங்கிட்டே கொடுத்துட்டுப் போன பத்திரத்தைப்பற்றித் தெரிந்துகொள்ள விரும்பு கிருயா?

**சுகுண:** இல்லே. தாங்களே எல்லாம் என்று அவர் சொல்லிவிட்டுப்போனபிறகு நான் தெரிந்து கொள்ள நினைப்பது அவ்வளவு நல்லதல்ல என்று நினைக்கிறேன்.

**வேல:** இருந்தாலும், நீ அதைத் தெரிந்துகொள்ள வேண்டும். ஏனென்றால் சொத்துக்குடையவள் நீ. மேலும் அதில் அடங்கிய சில அம்சங்களை உன்னைக் கேட்டுச் செய்யவேண்டியதாயிருக்கிறது. வேறொன்று மில்லை. இதோ பார்.

(என்று பத்திரத்தைக் காட்டுவது)
(கொஞ்ச நேரம் சுகுண அதைப்படித்து விட்டு)

**சுகுண:** நீர் விரும்பினால் என்னைத் திருமணம் செய்து கொள்ளலாம் அல்லவா?

**வேல:** ஆமாம்.

**சுகுண:** என் விருப்பம் ஒன்றும் அதில் குறிக்கப்பட வில்லையே?

**வேல:** அப்போது நீ மைனரல்லவா?

**சுகுண:** உம். பிறகு.

**வேல:** நீ என்னைத் திருமணம் செய்து கொள்ள மறுக்கவும் கூடாது.

**சுகுண:** மறுத்தால்?

**வேல:** இறந்த உன் அப்பாவின் உயிர் சாந்தியடையாது.

**சுகுண.** நல்ல யோசனை. இவ்வளவும் எங்கப்பா சம்மதித்து எழுதிய வாசகங்கள்.

**வேல:** இதிலென்ன சந்தேகம்? உன் எதிரில் தானே இதை என்னிடம் கொடுத்தார்?

**சுகுண:** சரி, அப்படியானால் உங்களிஷ்டம்.

**வேலப்:** என் இஷ்டம் என்று ... ... யாகவா இருக்கிறது? கண்ணே! சுகுண! என் பச்சைக்கிளியே!

என் ஜீவ நெருப்பில் எரிந்து கொண்டிருக்கும் அணை யாதசுடரே! பட்டுப்போகும் தருவாயிலிருக்கும் இந்தப் பாழ்மரத்துக்கு நீர் ஊற்றி வளர்க்க வந்த என் நீல வேணி! அந்தகாரம் சூழும் என் வாழ்வை உய்விக்க வந்த அமுதமே! வா! இப்படி உட்கார்.

**கருணை :** மாமா.

**வேல :** அப்பா! மாமா! எவ்வளவு இன்பமான வார்த்தை, பல்லில்லாத கிழவர்களும் பருகும் பாலாமிர்தம் போன்ற வார்த்தை. மாமா! ஆஹா. இந்தக் கழுதை கண்ணம்மாளும் இவ்வளவு நாள் என்னோடு வாழ்ந் தாளே, ஒரு நாளாகிலும் இந்தமாதிரி மாமா என்று அவள் வாய் குளிர, என் மனம் குளிர, கேட்பவர்கள் காது குளிர அழைத்தாளா? ஐயோ! இப்படிவா, உன் னைத்தான், அப்படிப்போ என்று உளறிக் கொட்டுவா.

**மாமா! என்ன இன்பம்! உடம்பெல்லாம் ஒரே ஐஸ் வெச்சுக் கட்டினமாதிரி இருக்கு. குளிரால் நடுங்குகிற ஒருவனுக்கு ஒரு அருமையான கம்பளிப் போர்வை கிடைத்தமாதிரி அப்பப்பா.**

**கருணை :** மாமா நிறுத்தும், இதை எல்லாம் தாங்கள் தூங் கிக்கொண்டே சொல்லி யிருக்கலாமே.

**வேல :** தூங்கிக்கொண்டே சொல்வதா?

**கருணை :** ஆமாம்.

**வேல :** தூங்கிக்கொண்டே யாராச்சும் பேசுவார்களா?

**கருணை :** எவ்வளவோ பேர் பேசுகின்றார்கள். அதைத்தான் வாய்ப்பெனத்தல் என்பார்கள்.

**வேல :** நான் சொல்லும் அவ்வளவும் வாய்ப்பெனத்தலா?

சுகுணா: ஆம்.

வேல: நான் உன்னை அடையத் தகுதியில்லாதவனா?

சுகுணா: ஆமாம்.

வேல: சிறகொடிந்த பறவை நீ.

சுகுணா: அதைப் பிடிக்க முயலும் குருடர் நீர்.

வேல: இவன் ஓர் எரிமலை.

சுகுணா: அது நம் நாட்டில் இல்லை.

வேல: வேலென்ற வாளிடம் விளையாடுகிறாய்?

சுகுணா: வாள் தங்கம் என்பதற்காகக் கழுத்தைப் பரிசளிக்க முடியுமா?

வேல: நான் அழகாயில்லையா?

சுகுணா: 30 வருஷங்களுக்கு முன்பு.

வேல: கிழவனா நான்?

சுகுணா: இல்லை, வயதானவர்.

வேல: திருமணம்?

சுகுணா: சுடலையில்.

வேல: முடியாதா?

சுகுணா: முடியாது.

வேல: செல்வாக்காலேயே பெறமுடியாத பிச்சைக்காரியாக்கி விடுவேன்.

**சுகுணா :** பேதா பேதங்களற்று உலகம் பங்கிடும்போது அதில் எனக்கும் ஓர் பங்குண்டு.

*[திடீரென்று வேலைக்கார விநாயகம் உள்ளே நுழைந்து]*

**வேலை :** அம்மா, உங்களை யாரோ ஒரு அம்மா பார்க்க வேணுமாம், வெளியே காத்துக்கிட்டிருக்காங்கோ. உங்களோடு படிச்சவங்களாம்.

**சுகுணா :** என்னையா? இதோ.

*[என்று வெளியே போய்ப் பார்க்க ஒரு பெண்]*

**பெண் :** வேலப்பரைப் பகைத்துக் கொள்ளாதே, பிறகு பேசிக்கொள்ளலாம்.

**சுகுணா :** நீயா?

**பெண் :** உஷ். சொன்னபடியே செய்.

**சுகுணா :** சரி.

*[சுகுணா உள்ளே வந்துகொண்டே வேலப்பரைப் பகைத்துக்கொள்ளாதே! வேலப்பரைப் பகைத்துக் கொள்ளாதே, பிறகு பேசிக்கொள்ளலாம். என்று சொல்லிக்கொண்டே உள்ளே நுழைந்தாள்]*

என்ன மாமாவுக்கு ரொம்பொ கோபம் போலிருக்கு?

**வேல :** எனக்கா, எனக்கென்ன கோபம்? உனக்குத்தான் கோபம். ஆனால், அதிலும் ஒரு அழகு குளிர்ச்சி, அன்பு எல்லாம் இருந்தது.

**சுகுண :** மாமா, உங்கள் மனேதிடத்தைப் பரிசோதித்தேன். வேறென்றுமில்லை. கோபப்படாதீர்கள்,

**வேல :** ஏதோ, ஒரு வயசான கிழவனை பரிசோதிக்கிற மாதிரி பரிசோதிக்கிற. எனக்கும் கொஞ்சம் கோபம் அதிகமா வந்துட்டுது. ஏன்னு எனக்கும் வாலிப முறுக்குப்பாரு. போகட்டும் இந்த சொக்கத் தங்கத்தை உன் கோபக்கனலில் புடம்போட்டுப் பார்த்து விட்டாய். இப்போது திருப்திதானே ?

**சுகுண :** இல்லை மாமா, இரண்டோர் நாள் வாழ்வதென்ருல் இந்தப் பல பரீட்சை வேண்டியதில்லை. நீண்ட நாட்கள் வாழ வேண்டுமே ?

**வேல :** அதுமாத்திரமில்லே. உன் விதியும் அப்படியிருக்குதே ? அதையாராலே அழிக்க முடியும் ? யாராயிருந்தாலும் விதிக்குக் கட்டுப்பட்டுத்தானே தீரவேணும். சும்மாவிடுமா ?

**சுகுண ;** சரி, வருகிறேன்.

*வழி ரோடு [டர்னிங் சீன்]*

**மனம் :** விதி ! விதி ! சிங்கத்தால் கொல்லப்படுவது விதி தானே ?

**சுகுண :** அதே சிங்கத்தை யடக்கியாள்வது மதியல்லவா ?

**மனம் :** யானைக்காலால் மிதிக்கப்பட்டு இறப்பது வீரர்களின் விதியல்லவா ?

**சுகுண :** அதே யானையை அப்படிச் செய்யத் தூண்டுவது பாகனின் மதியல்லவா ?

**மனம் :** மண்ணில் மறைந்துகிடப்பது பொன்னின் விதி தானே ?

**சகுண :** அதைத் தோண்டி எடுத்துப் பலவித ஆபரணங்கள் செய்து போட்டுக்கொள்வது மக்களின் மதியல்லவா ?

**மனம் :** கெதிமாருத பரிதியும், வழக்கம்போல் வரும் வெண்ணிலவும், சுற்றிநிற்கும் நட்சத்திரங்களும், பகலிரவும், பருவக் காற்றும், பலத்த மழையும், தவருதிருப்பது அவைகளுக்கிட்ட விதிதானே ?

**சகுண :** அவைகளை வளைவெட்டித் தம் இன்பத்துக்குள்ளடங்கியது சமுதாயத்தின் மதியல்லவா ? பச்சிளங் குழந்தைகள் அறியுமா விதியை ? பாலனுக்குண்டா விதி ? பள்ளிச்சிறுவன் அறிவானு விதியை ? இவ்வளவு ஏன் ? விதி ஒன்றிருப்பதாக நமக்குப் பயங் காட்டியதே மதிதானே. மதிவழி நடப்போம்.

மதியில்லையானல் கொந்தளிக்கும் கடல்மேல் மரக்கல மேது ? ஆதாரமேதுமில்லாத ஆகாயத்தில் விமானமேது ? இரண்டங்குலத் தண்டவாளத்தில் விசையாக ஓடும் ரயிலேது ? கம்பியில்லாத் தந்தி யேது ! கடலுக்கப்பால் பேசும் செய்தியை நாம் கேட்பதேது ? இறந்தவன் உருவத்தை இன்னும் காண்பதேது ? ஒலியலைச் செய்தி, ஆகாய விமானம் மின்சார விளக்கு இவ்வளவும் அந்த விதியை வெறுத்த விஞ்ஞானியின் மதியல்லவா ? மதியே உன்பால் அடைக்கலம். முயன்று பார்க்கிறேன்.

## காட்சி 5

**[மல்லிகாவின் கதைத்தொடர்ச்சி]**

*[மல்லிகா கர்ப்பவதியாயிருப்பதைக் கணவன் அறிந்தால் ஆபத்தாக முடியும் என்று நினைத்த மரகதம்மாள் மகளுக்குக் லஞ்சம் பணம் கொடுத்து வெளியே.*

*எங்கோயாவது இருந்துவிட்டு வரும்படி ரகசியமாக வெளியேற்றிவிட்டுக் காணுமல் போய்விட்டாள் என்று கணவனிடம் சொல்லிவிடுகிருள்.]*

**கருணு :** எங்கே அந்த மட்டி ?

**மரகதம் :** சாயங்காலத்திலிருந்து காணவில்லே.

**கருணு ;** என்ன, காணவில்லேயா ?

**மரகதம் :** ஆமாம், தேட ஆள் அனுப்பியிருக்கிறேன்,

*[என்று அழுகிருள்.]*

**கருணு :** இதோ நான் போய்க் கண்டுபிடிச்சிகிட்டு வாறேன் பாரு,

*[என்று போகிருன். வழியில் அவன் நண்பர் நாராயணன் சந்திக்கின்ருர்.]*

**நாராயணன் :** என்ன கருணுகரரே ! காத்தா பறக்கிறீங்கோ ?

**கருணு :** காத்துமில்லெ, மழையுமில்லெ.

**நாரா :** இடியா, மின்னலா ?

**கருணு :** அதுவுமில்லே. பெண் தவறிப்போச்சி.

**நாரா :** (செத்துவிட்டது என்று நினேத்துக்கொண்டு) ஐயோ பாவம், சின்ன வயசு, அதுவும் ஒரே பெண்ணு. முன்னே நான் பாக்கறப்போ நல்லா இருந்துதே? என்ன உடம்புக்கு ? உம், நல்லவங்களுக்கெல்லாம் இப்போ திடீர் திடீர்னு இப்படித்தான் வருது.

**கருணு :** அட டே, அது இல்லேய்...... வேறெ அனுதாபத் தீர்மானம் போட்டறே. ஓடிப்போச்சி.

**கருணை**: அதைத் தோண்டி எடுத்துப் பலவித ஆபரணங்கள் செய்து போட்டுக்கொள்வது மக்களின் மதியல்லவா?

**மனம்**: கெதிமாருத பரிதியும், வழக்கம்போல் வரும் வெண்ணிலவும், சுற்றிநிற்கும் நட்சத்திரங்களும், பகலிரவும், பருவக் காற்றும், பலந்த மழையும், தவருதிருப்பது அவைகளுக்கிட்ட விதிதானே?

**கருணை**: அவைகளெல்லாவற்றையும் நம் இன்பத்துக்குள் ளடக்கியது சமுதாயத்தின் மதியல்லவா? பச்சிளங் குழந்தைகள் அறியுமா விதியை? பாலனுக்குண்டா விதி? பள்ளிச்சிறுவன் அறிவானு விதியை? இவ்வளவு ஏன்? விதி ஒன்றிருப்பதாக நமக்குப் பயங் காட்டியதே மதிதானே. மதிவழி நடப்போம்.

மதியில்லையானுல் கொந்தளிக்கும் கடல்மேல் மரக்கலமேது? ஆதாரமேதுமில்லாத ஆகாயத்தில் விமானமேது? இரண்டங்குலத் தண்டவாளத்தில் விசையாக ஓடும் ரயிலேது? கம்பியில்லாத் தந்தியேது? கடலுக்கப்பால் பேசும் செய்தியை நாம் கேட்பதேது? இறந்தவன் உருவத்தை இன்னும் காண்பதேது? ஒலியிலைச் செய்தி, ஆகாய விமானம் மின்சார விளக்கு இவ்வளவும் அந்த விதியை வெறுத்த விஞ்ஞானியின் மதியல்லவா? மதியே உன்பால் அடைக்கலம். முயன்று பார்க்கிறேன்.

## காட்சி 5

**[மல்லிகாவின் கதைத்தொடர்ச்சி]**

*[மல்லிகா கர்ப்பவதியாயிருப்பதைக் கணவன் அறிந்தால் ஆபத்தாக முடியும் என்று நினைத்த மரகதம்மாள் மகளுக்குக் கொஞ்சம் பணம் கொடுத்து வெளியே.*

*எங்கோயாவது இருந்துவிட்டு வரும்படி ரகசியமாக வெளியேற்றிவிட்டுக் காணு மல் போய்விட்டாள் என்று கணவ னிடம் சொல்லிவிடுகிருள்.]*

**கருணு:** எங்கே அந்த மட்டி ?

**மரகதம்:** சாயங்காலத்திலிருந்து காணவில்லே.

**கருணு;** என்ன, காணவில்லேயா ?

**மரகதம்:** ஆமாம், தேட ஆள் அனுப்பியிருக்கிறேன்,

*[என்று அழுகிருள்.]*

**கருணு:** இதோ நான் போய்க் கண்டுபிடிச்சிகிட்டு வாறேன் பாரு,

*[என்று போகிருன். வழியில் அவன் நண்பர் நாராயணன் சந்திக்கின்ருர்.]*

**நாராயணன்:** என்ன கருணுகரரே! காத்தா பறக்கிறீங்கோ ?

**கருணு:** காத்துமில்லெ, மழையுமில்லெ.

**நாரா:** இடியா, மின்னலா ?

**கருணு:** அதுவுமில்லே. பெண் தவறிப்போச்சி.

**நாரா:** (செத்துவிட்டது என்று நினைத்துக்கொண்டு) ஐயோ பாவம், சின்ன வயசு, அதுவும் ஒரே பெண்ணு. முன்னே நான் பாக்கறப்போ நல்லா இருந்துதே? என்ன உடம்புக்கு? உம், நல்லவங்களுக்கெல்லாம் இப்போ திடீர் திடீர்னு இப்படித்தான் வருது.

**கருணு:** அட டே, அது இல்லேய்... வேறெ அனுதாபத் தீர்மானம் போட்றே. ஓடிப்போச்சி.

**நாரா:** உம், இன்னும் சாகாமே இருக்கிறையே, சே, சே, இப்பொ எங்கே ஓடறே.

**கருணை:** போலிசிலே கம்ப்ளேண்டு கொடுத்தா கண்டுபிடிச்சடுவாங்க இல்லெ?

**நாரா:** உம், உம்! கண்டுபிடிப்பாங்கோ? அந்த ஆளயே கொண்டு வந்து காட்டினு, பளார்னு கண்டுபுடிச்சடுவாங்கோ. இதைச் சொல்றதுயே உனக்கு வெக்கமா இல்லெ?

**கருணை:** ஏன்?

**நாரா:** வெலையாகிற பொண்ணு. அதெபத்தி இப்படி எல்லாம் வதந்தியெ பரப்பி விட்டா! நாளக்கி உங் கதி என்ன ஆகும்? சொந்தக்காரன் சும்மா விடுவானு?

**கருணை:** அதுவும் உண்மைதான். வேறெ என்னதான் செய்யறது?

**நாரா:** வாயு ஜெபம் பண்ணு. எங்கே இருந்தாலும் அடிச்சிக் கொண்டுகிட்டு வந்துவிட்டுடும்! என்னமோ கழுதெ கால்லெ ரத்தம் இருக்கிற வரையிலும் சுத்தப் போவுது.

**கருணை:** எவ்வளவு லேசா சொல்றீங்கோ?

**நாரா:** சொல்றதிலே லேசா வேறே? கனமா வேறையா என்ன? வரப்போற ஆபத்தே சொன்னேன். பின்னலே உன் இஷ்டம். எம்புள்ளே கூடத்தான். இப்படி ஓடிட்டான். அதுக்காக நான் செத்துப்பூட்டேனு? போயி ரகசியமா வேண்ணு தேடு. இப்படி எங்கிட்டெ

சொன்ன மாதிரி ஊருக்கெல்லாம் சொல்லிட்டு மன சுலே போட்டுவெச்சுக்காதே. போ. போ.

*[கருணாகரன் தொங்கிய முகத்தோடு வீடு திரும்புகிறான்]*

## [ வயக்காடு ]

*[கர்ப்பவதி கோலத்தோடு போய்க்கொண்டிருக்கும் மல்லிகா இளம் வெய்யிலினால் மயக்கமுற்றுக் கீழேவிழுந்துவிடுகிறாள். ஏற்றம் இறைத்துக் கொண்டிருந்த ஒரு குடியானவன் இவளைக்கண்டு தன் வீட்டுக்கழைத்துக் கொண்டு போய் உபசரிக்கின்றான்]*

**மாறன்:** ஏய், காமாட்சி! இங்கனெ வா. இதோ பாரு.

**தவனம்:** யாரு இந்த புள்ளை ?

**மாறன்:** இவவேறெ தபால்காரு மாதிரி விலாசம் விசாரிக்கிறு ? யாரோ பாவம். கர்ப்பம் போலத் தெரியுது நம்ப வயல்லே மயக்கமடிச்சி விழுந்துட்டுது. ஏதாச்சும் கஞ்சிகிஞ்சி ஊத்திக் காப்பாத்து.

*[தன் தலைப்பாகைத் துணியால் விசிறுகிறான்]*

**தவனம்:** உன்னெ பார்த்தா பரிதாபமா இருக்கு. உன் நெலமையெ பார்த்தா கோபமா வருது.

**மல்லி:** ஏம்மா ?

**தவனம்:** உம்பாடே திண்டாட்டமா இருக்குக. உனக்கெதுக்கு புள்ளே ? யாரு உம்புருஷன்.

**பக்கத்து வீட்டுக்காரி:** செத்துட்டிருப்பான்.

**தவனம்:** சே. சே.

**எதிர் வீட்டுக்காரி:** என்ன சே. சே? கழுத்திலே தாலி இருக்குதா?

*[மல்லிகா திடுக்கிட்டு கழுத்தைத் தொட்டுப் பார்த்துக்கொள்கிறாள்.]*

**அண்டை வீட்டுக்காரி:** ஏன்? விழிக்கிறே? உண்மையெ சொல்லு. ஏதுவும் சொல்லாமே எங்க தலையிலே கல்லெ போடாதே?

**மாறன்:** ஏய், நீங்களெல்லாம் பொம்பளைங்களா?

**பக்கத்து:** எப்படித்தான் தெரியுது?

**மாறன்:** நல்லா தெரிஞ்சுது போ. மயக்கமடிச்சு விழுந்திருக்கு. கொஞ்சம் தெளியட்டும் கேட்கலாம்னு இல்லாமே கோழி வயத்திலே முட்டை பறக்கிற மாதிரி. பறக்கிறீங்களே!

**அடுத்த ஒரு கிழவர்:**

ஏய் கழுதைகளா! என்ன பேரிச்சம்பழத்தே மொய்க்கிறமாதிரி மொச்சிக்கிட்டிருக்கிங்கோ? போய் அவங்கவங்கோ வேலையெ பாருங்கோ.

*[எல்லோரும் கிழவனுக்குப் பயந்து போய்விடுகிறார்கள்]*

**மாறன்:** தவனம்! கொஞ்சம் ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள். கஷ்டமான வேலே ஒண்ணும் வைக்காதே. வைரங்களே சுமச்சிப் போடு தெரியுதா?

**தவனம்:** சரி.

## காட்சி 6

*[குலசேகரன் வீடு. குலசேகரன் தனியாகப் பேசிக் கொண்டிருக்கின்றான். அவன் தங்கை தயாபரி, தனியாகத் தவிக்கும் சுகுணாவுக்கு உதவி செய்யும் படி வேண்டுகிறாள்!]*

**குலசேகரன் :** நான் பாவத்திற்குக்கூட அதிகமாகப் பயப்பட வில்லை, பழிக்கே அதிகமாகப் பயப்படுகின்றேன். ஆண்கள் சுயநலம் பிடித்தவர்கள் என்று இதுவரையிலும் சுமத்திய பழியை மாற்ற நாம் முயற்சித்திருக்க வேண்டும். அதற்குப் பதில் அந்தப் பழியை அதிகப்படுத்தி விட்டோம். என் அறியாமையால் சுமந்தகொண்ட பெரும் பழியை எப்படியும் ஒழித்தே திருவேன்.

*[தயாபரி உள்ளே வருகிறாள்]*

**தயாபரி :** அண்ணா!

**குலசே :** வாம்மா.

**தயா :** அண்ணா! எங்கூட படிச்சிதே சுகுணா தெரியுமா அண்ணா உங்களுக்கு?

**குலசே :** தெரியும்.

**தயா :** அவங்கப்பா செத்துட்டாரு. அவங்கம்மா அதுக்கு முன்னையே செத்துட்டாங்கோ.

**குலசே :** அதுக்கு என்னம்மா இப்போ?

**தயா :** அவங்கப்பா சாவறப்போ சொத்தெல்லாம் வேலப்பர் மேலே எழுதி வெச்சுட்டாராம். அதனாலே வேலப்பர், சுகுணா தன்னெ கலியாணம் பண்ணிகிட்டாத் தான் [illegible]தெல்லாம் குடுப்பேன். இல்லாட்டி முடியாதுன்னு பயங்காட்டி ஏமாத்தப் பார்க்கறாராம்.

ங்காதே-

**குலசே:** உம். அதுக்கு?

**தயா:** நம்போ எப்படியாச்சும் உதவி செய்யவேணும்.

**குலசே:** நம்போ எப்படியம்மா உதவி செய்யறது?

**தயா:** அது எப்படியோ எனக்குத் தெரியாது அண்ணு. ஒருவேளெ அந்த மாதிரி எனக்கே நடந்துட்டுதுன்னு வெச்சிக்கிங்கோ. எனக்கு உதவிசெய்ய மாட்டீங்களா அண்ணு?

**குலசே:** உனக்கு உதவிசெய்யலாம்மா. என்ரு நீ என் தங்கை. அந்தப் பொண்ணுக்கு நான் உதவி செய்ய லாமா? ஊரார் என்ன சொல்லுவாங்கோ?

**தயா:** ஓகோ. அதுக்குச் சொல்றீங்களா? அப்டின்னு,

*[அண்ணன் காதில் ஏதோ சொல்கின்ருள்.]*

**குலசே:** பேஷ். நல்ல யோசனைதான். ஆனு அந்தப் பொண்ணு இதெ நம்பவேணுமே?

**தயா:** நம்பறமாதிரி நான் செய்யறேன் அண்ணு.

**குலசே:** எப்படியோ செய், கடைசியிலே என்னைப் பழி வாங்காதே. உதவி செய்பவர்கள் யார் என்று அவ ளிடம் சொல்லாதே. ஏனென்ருல், நான் என்று தெரிந்தால் ஒருசமயம் அச்சப்படுவாள். எல்லாம் நீயே செய்தமாதிரி காட்டிக்கொள்.

**தயா:** அதுவும் உண்மைதான்.

**குலசே:** அவளுக்காக மாத்திரமில்லெ நான் சொல்லுவது. ஊரார் ஒரு மாதிரியாகப் பேசுவார்கள். வேலப்பன் விஷப்பாம்பு. இவ்வளவும் கவனத்தில் வைத்துத்தான் சொல்லுகின்றேன். தெரியுமா?

காட்சி 7

## ரோடு

*[தயாபரி, சுகுணாவைச் சந்திக்கிறாள்]*

**சுகுணா:** தயா! அன்னிக்கி நான் எங்க மாமாகிட்டே சண்டே போடறப்போ-பகச்சிக்காதேன்னியே எதுக்கு?

**தயா:** எதுக்கா, தந்திரமா காரியத்தெ செய்றது. போய் தகராறு பண்ணிக்கிட்டு எதுக்கு இருக்கோணும்.

**சுகுணா:** தந்திரமா போறதுன்னா, அவரெ தாலி கட்டிக் கிறதா?

**தயா:** சே. சே. நான் அப்படிச் சொல்லுவேனா?

**சுகுணா:** பின்னெ என்ன திட்டம் வெச்சிருக்கே?

**தயா:** திட்டமா? இதோ தயார் செய்துவிட்டேன் பார்.

*[ஒரு கடிதத்தை நீட்டுகிறாள்]*

**சுகுணா கடிதத்தைப் பார்க்கிறாள்**

**கடிதம்**

*அன்புள்ள சுகுணா! நீ என்னைச் சந்திக்கும் படி எழுதியிருந்தாய். என்னால் சந்திக்க முடியவில்லை. சுட்டிக்காட்ட முடியாத காரணங்களால் ஏற்பட்ட தடைதான். விரைவில் சந்திக்கின்றேன். வேலப்பர் என்ற வெறி நாயிடமிருந்து தப்பிக்க நீ வேலை செய். அந்தக் கிழக்கயவன் உன் நினைவாலேயே சாக வேண்டும்.*

அவன் கல்லறை மேல் காதலர்களாகிய
நம்மிருவர் காதல் சித்திரத்தைப்
பொறிக்க வேண்டும்.

அன்புள்ள,

குலோத்துங்கன்.

கருணு: இதைப் படித்து முடித்துவிட்டு, ஐயோ! இப்படி ஒரு ஆளை எனக்குத் தெரியாதே. இப்படி ஒரு வேலையை எடுத்துக் கொண்டிருக்கின்ருயா தயா?

தயா: நான் என்ன கமிஷன் ஏஜண்டா?

கருணு: பிறகு, குலோத்துங்கன் யாரு?

தயா: அப்படி ஒரு ஆளு நம்பொ ஜ°ரிஷக்ஷன்லியே இல்லே.

கருணு: பின்னே இந்தக் கடிதம்?

தயா: டுப்ளிகேட்.

கருணு: ஒண்ணுமே விளங்கலையே.

தயா: விளங்காது. வேலப்பர் உன்னை வெறுக்க வேண்டும் என்பதற்கான ஏற்பாடு.

கருணு: ஏன்?

தயா: இந்தக் கடிதத்தைப் பார்த்தால்தான் அவர் உன்னைத் திருமணம் செய்துகொள்ளும் எண்ணத்தைக் கைவிடுவார்.

கருணு: சொத்து?

தயா: மரியாதையாகக் கொடுக்கட்டும். இல்லையானல் வாங்கவேண்டிய இடத்தில் வாங்கிக் கொள்வோம்.

சுகுண: நான் அவரைத் திருமணம் செய்துகொள்ளா விட்டால் எங்கப்பா ஆன்மா சாந்தியடையாதே?

தயா: எந்த மடையன் சொன்னன்? ஆண் பிள்ளை தான் அவிர்ப்பாகம் கொடுக்க முடியும்னு சொல்லிருக் காங்களே தவிரப் பெண்பிள்ளைக்கு அந்த உரிமை யில்லையே?

சுகுண: அந்த சாஸ்திரமும் தான் இப்போ அழுக்குக் கூடைக்குப் போவுதே?

தயா: ஆ! அதைத்தான் சொல்ல வந்தேன். நீ மறுத் தால் என்று எழுதி வைத்திருக்கின்றரே தவிர வேலப் பர் மறுத்தால் என்ன நிலமை என்பதை அந்தப் பத்தி ரத்தில் எழுதவில்லை.

சுகுண: ஆமாம்.

தயா: அதற்காகத்தான் இந்தக் கடிதம். இதை அவர் பார்க்கும்படி செய். படித்து விட்டால் நீ வேறு யாரையோ காதலிக்கிருய் என்று நினைத்துக் கொள் வார். பிறகு நீயே அவரைத் திருமணம் செய்து கொள்ள விரும்பினலும், அவர் ஒப்புக்கொள்ள மாட் டார். No other go தெரியுமா?

சுகுண: Very Good. உன் மூளை.

தயா: ஆட்டொமாடிக். சுகுண! மற்றென்று உனக்கு யாரிட மிருந்து எந்த வேளையில், எந்தவிதமான உதவி கிடைத்தாலும் சந்தேகப்படாதே தெரியுமா?

உன.
த்தைக்

## காட்சி 8

*[வேலப்பர் படுக்கை அறை. இரவு. காகிதம் ஒன்று வந்து விழுகிறது. வேலப்பர் தூங்கி எழுந்து தன் கட்டிலின் பக்கத்தில் விழுந்துகிடக்கும் தீப்பெட்டியை எடுக்கப் போகின்றார். பக்கத்தில்— பொய்க் காதல் கடிதம். படிக்கிறார்.]*

**வேல :** குலோத்துங்கன் — கழுதை. என்னை வெறிநாய் என்று எழுதியிருக்கின்றான். நானா வெறிநாய்? ஏண்டா வேட்டைநாயே! யார் வெறிநாய் என்பதைக் காண்பிக்கின்றேன். அந்த மோகத்தினால்தான் இந்தக் கழுதை என்னை மறுத்ததோ? விபசாரி, உம். அமரநாதர் மகள் கெதி அம்பலம். விதி வேலப்பரிடம் விளையாடுகிறது.

*[அது முடிந்ததும் ஒரு ஆள் கடிதத்தைக் கொண்டுவந்து கொடுத்தல்]*

**வேல :** என்னடா! என் வீடே போஸ்டாபிசா போச்சு.

*[அதையும் படிக்கிறான்]*

அன்புள்ள மாமா! வணக்கம்.

அன்று தாங்கள் என் சம்மதத்தைக் கேட்டபோது அறியாமையால் ஏதேதோ சொல்லிவிட்டேன். மன்னிக்கவேண்டும். நீண்ட தீர்க்காலோசனைக்குப் பிறகு உங்கள் முடிவுக்கே என்னை ஒப்படைத்து விட்டேன். இனி தாங்களே நான். நானே தாங்கள். இனி 'நாம் இருவர்' அல்ல. நாம் ஒருவர். அப்பாவின் ஆன்மா சாந்தியடையட்டும்.

அன்புள்ள,
சுகுணா

**வேல:** என்னடா இது ப்ளாக்மார்க்கெட் வியாபாரமா யிருக்கு? குலோத்துங்கனுக்குக் காதலி சுகுண, சுகுண வுக்குக் காதலன் நான். முக்கூட்டு ஒப்பந்தமா இருக்கு. பட்டா எம்பேர்லெ, சாகுபடி அவன் பண்றது. என்னடா இது ஒரே கந்தர்கோளமா இருக்கு.

**கண்ண:** சாகுபடியுமில்லெ. அறைபடியுமில்லெ, எல்லாம் ஒரே கௌளபடி.

**வேல:** ஏய்! கண்ணு. இது சுகுண கையெழுத்தா பாரு. ஓ நீ கைரேகையா? டேய், விநயகம்! உனக்குத் தெரியு மாடா?

**விந:** நான் அந்த ரேகைகூட வெச்சதில்லிங்களே.

**வேல:** இந்த வீட்டிலே எல்லாம் தற்குறி மயம். டேய் அவ பாட்டு புஸ்தகம் ஒண்ணு நம் அலமாரியிலே இருக்கு அதே கொண்டுவா.

*[கொண்டுவந்து கொடுத்தவுடன் இரண்டையும் ஒத்திட்டுப் பார்த்து]*

அவள் கையெழுத்துதான். யாரோ ஒரு குலோத் துங்கனிடம் கள்ள நட்பு வைத்துக்கொண்டு ஏன் எனக்கு இப்படி எழுதியிருக்கிருள்? இவளை மணப்பதால் இருவகை நஷ்டம். ஒன்று, இவள் ஆசை நாயகன் காதல் மாறுது. இரண்டாவது சொத்தையும் நாம் பறி கொடுத்துவிட வேண்டும். இவளைத் திரு மணம் செய்துகொள்ளாமல் விரட்டினல் சொத்தாவது மிச்சமாகும்: அதுவும் சரி யில்லெ. அப்படியே இவளை உயிரோடு விட்டு வைத்தால் காலிகளோடு சேர்ந்துகொண்டு

நம் தலையில் கல்லைப் போட்டாலும் போடு
வாள் ஒரேயடியாக... .... ... ...

*[என்று கைதட்டுகிறான். இரண்டு கொலையாளிகள் வந்து நிற்கின்றனர். அவர்கள் காதில் ஏதோ சொல்லுகிறான்.]*

## [குடியானவன் மாறன் வீடு]

*[மல்லிகா கர்ப்ப வேதனை]*

*[சரியாகத் தமிழ் தெரியாத சட்டைக்கார மருத்துவச்சியிடம்.]*

**குடியா:** அம்மா, எங்க விட்டிலே ஒரு அம்மா குளி குளிக்காமே இருக்காங்கோ.

**மருத்துவச்சி:** குளிக்கலே எவ்வலோ நாலா?

**குடியா:** 10 மாதமா.

**மருத்:** ஓ! காட் (O God!) 10 மாசம் குளிக்கலே வெசாதி வராதெ என்னபண்ணும். Every day குளிக்கோணும் தெரியுமா?

**குடியா:** அடெ என்னடா வம்பு இது. தினம் குளிக்கிறுங்கோம்மா.

**மரு:** பின்னே என்ன வெசாதி?

**குடி:** கெர்ப்பம்.

**மரு:** நாட்டுப்புறத்து ஆளு பேருங் யாரும் Practise பண்ற தில்லே?

**குடி:** பெருங்காயமுமில்லை, அந்த டப்பியுமில்லே. அதெல்லாம் மலையேறிப்பபாச்சு.

மரு: பீஸ் கட்றே?

குடி: இல்லிங்கோ, நான் பீஸா கட்றதில்லே. துண்டா தான் கட்றது.

மரு: அடெ, Fool பணம் கட்றெ?

குடி: அதுவா. அதுக்கா பீசுன்னு பேரு. துணிக்கும் பீசு. பணத்துக்கும் பீசு. சரி சீக்கிரமா வாங்கோ.

*[மருத்துவச்சி சிங்காரித்துக் கொள்வது, அவள் அங்கே கர்ப்பவேதனைப்படுவது. குடியானவன் அடிக்கடி மருத்துவச்சி வீட்டுக்கு வந்து வந்து போவது நடந்துகொண்டிருக்கிறது.*

*இவள் சிங்காரித்துக் கொண்டு வருவதற்குள் மல்லிகாவுக்கு ஒரு ஆண் குழந்தை பிறந்து விடுகிறது. நாட்டு வைத்தியம் பார்க்கப்படுகிறது. அக்கம்பக்கத்தில் இருப்பவர்கள் எல்லாம் வந்து சூழ்ந்துகொள்ளுகிறார்கள்.]*

## காட்சி 8

## ரோடு

***[கருணாகரர் போய்க்கொண்டிருக்கிறார். எதிரில் இரண்டு பேர்-மணமாகாத மல்லிகாவுக்கு மாறன் வீட்டில் குழந்தை பிறந்ததைப் பற்றிப் பேசிக் கொண்டு போகின்றார்கள். இதை ஒட்டுக்கேட்டுக் கொண்டே அவர்களைப் பின் தொடர்ந்து எல்லா விபரமும் தெரிந்து கொள்கிறான்.***

***பிறகு ஒரு நாலைந்து பேரை அழைத்துக் கொண்டு மாறன் வீடு நோக்கி புறப்படுகிறான்.***

*இவர்களை எதிர்க்க அந்த ஊரே ஒன்றுய்ச் சேருகிறது.]*

**கருணை**: டேய் மாரு! என்ன தைரியம் உனக்கு?

**மாறன்**: இதுக்கு என்ன தைரியம் வேண்டியிருக்கு?

**கருணை**: என் மகளை.

**மாறன்**: உன் மகளா அது. வெளியே சொல்ல வெட்கமா யில்லே? எங்கையாவது தூக்கு போட்டுகிட்டு சாவறதெ விட்டுட்டு பட்டாளத்தைச் சேர்த்துக்கிட்டு வந்துட்டியே. பழைய கவனமா?

**கிராமத்தான்**: *1.* ஆமாம், அங்கே லெப்ட் ரைட் போட்டா ரில்லே, இங்கேயும் அதெ போட்டுப் பார்க்கலாம்னு நெனைக்கிறரு.

**கிராமத்தான்**: 2. இப்போ உன் துப்பாக்கியிலே கோட்டா யில்லே தம்பி. பட்டணத்தான் கிராமத்தானே எமாத்தின காலமெல்லாம் எமலோகம் போயிடிச்சி.

**கிழவர்**: எம்பா, கருணைகரா! உம்மகளே வெளியே வராமே காப்பாத்திருந்தா, இப்படி மானங்கெட்டு நிக்க வேண்டியதில்லையே?

**கிரா**: *1.* சூரப்புலி சுப்பராவ் மகன்.

**மாறன்**: நல்லா சொன்னேடா?

**கிரா**: 2. ஏண்ணே.

**மாறன்**: யாருக்கு வீரம் இல்லையோ அவங்களையே பாத்து சொன்னே பாரு.

*[உம். எல்லோரும சாகக்கன்றாகள்.]*

**கிழவர் :** போ, போ. உம்மகளே கூப்பிட்டுக் கிட்டுச் சந்தடி யில்லாமே போய்ச் சேரு.

*[கருணாகரன், அவனுடைய அடியாட்கள் வெட்கத் தோடு தலைகுனிந்து விடு திரும்புகிறார்கள். அவர் கள் போனவுடன், மல்லிகா மெல்லிய குரலில் அண்ணா! என்னாலே ஏனண்ணா உங்களுக்குக் கஷ்டம். நான் இப்போது போறேனண்ணா]*

**மாறன் :** நீ சும்மாயிரம்மா. இன்னும் 10 நாள் இருந் துட்டுப்போ. பச்செ ஒடம்பு. மறுபடியும் வந்தான்னா அவன் எலும்பை முறிச்சுட மாட்டேன்?

**மல்லி :** வேண்டாண்ணா.

**மாறன் :** ஓ! ஒங்கப்பாவா? மறந்துட்டேன்.

**மல்லி :** அவருக்கு ஒண்ணும் தொந்தரவு கொடுக்காதிங்க அண்ணா.

**மாறன் :** இல்லெம்மா, இல்லெ. நீ ஒண்ணும் கவலைப் படாதே.

## காட்சி 9

## கொலைக்களம்

*[சுகுணாவைக் கண்களையும் கையையும் கட்டிய கோலத்தோடு ஒரு சாக்குப்பையில் இருந்து கட்டவிழ்த்து விடுகிறார்கள்]*

**சுகுணா :** *[சுற்று முற்றும் பார்க்கிறாள்.]* நான் எங்கே இருக் கிறேன்?

**கொலை :** இருக்கின்ற இடத்தில்.

**சுகுணா :** நீங்கள் யார்?

**கொலை :** பார்க்கும்போதே தெரியவில்லையா?

**சுகுணா :** கையில் வாளோடு இருக்கும்போதே ஏதோ புண்ணிய கைங்கர்யத்தைச் செய்யப்போகின்றீர்கள் என்று தெரிகிறது.

**கொலை :** கொலையாளிகள்.

**சுகுணா :** கொலைத்தொழில்தான் உங்கள் ஜீவனமா?

**கொலை :** அருமையான தொழில்!

**சுகுணா :** வேறு ஏதாவது வேலையைத் தேடி ஜீவிக்கக் கூடாதா?

**கொலை :** வேறு வேலையில் இவ்வளவு வருமானம் கிடைக்காதம்மா. இதுவானால் ஒரே கொலை செய்தால் போதும். எங்கள் வாழ்நாளே முடிந்துவிடும்.

**சுகுணா :** அப்படி செய்யும்படி உங்களை ஏவியவர்கள் யார்?

**கொலை :** சொல்லமாட்டோம்.

**சுகுணா :** ஏனென்றால், தெரிந்துகொண்டோமென்ற சந்தோஷத்தோடு சாகலாமே என்றுதான்.

**கொலை :** டேய் வீரா! சொல்லாதேடா. இவ்வா எங்கேயாவது சொல்லிட்டா?

**சுகுணா :** அப்பொ என்னைக் கொல்லப்போவதில்லையா?

**வீரன் :** அடெடே, கட்டாயமா.

**சுகுணா :** என்னைத்தான் கொன்றுவிடப் போகின்றீர்களே. நான் எப்படிச் சொல்லமுடியும்?

**வீரன்:** அதுவும் சரிதாண்டா. வேலப்பர், அம்மா.

**கருணு:** என்ன, வேலப்பரா? அந்தச் சண்டாளக் கிழவனு இந்தச் சதி செய்யச் சொன்னுன்? மைத்துனர் மகள் என்ற இரக்கமே இல்லையா? என் தந்தையின் சொத்தை அபகரிக்க என்னையே கொன்று விடத் துணிந்துவிட்டானு? பல்லாயிர மக்களைப் பரி தவிக்கவிட்ட பாழும் பணமே! முட்டாள்களிடத்திலும் முரடர்களிடத்திலும் சரண்புகுந்து, அவர்கள் குற்றேவலை, கொலையை, வஞ்சகத்தைச் செய்யத் துணிந்துவிட்டாய். வெள்ளம் பள்ளத்தை நோக்கி ஓடுவதைப்போலவே, பணம் பணக்காரனை நோக்கி ஓடுகிறது. வேலப்பரை இதுவரையிலும் வெறும் லோபி என்று மாத்திரம் நினைத்திருந்தேன். இன்று கொலை காரனுகவும் மாறிவிட்டார். வேலப்பரே! கெடுமதி கண்ணுக்குத் தோன்ருதையா? வல்லவனுக்கு வல்ல வன் வையகத்தில் உண்டு என்பதை மறந்துவிடாதீர். என்னைக் கொல்ல அவர் உங்களுக்குக் கொடுத்த தொகை .... ....

**வீரன்:** பத்தாயிரம்.

**கருணு:** பத்தாயிரம்:—டாதிச் சுருட்டைக் குடிக்கும் பரம லோபி வேலப்பன் என்னைக் கொல்ல கொடுத்த தொகை பத்தாயிரம். 50 லட்சத்தை மோசடி செய்ய அவன் உங்களுக்கு அளித்த தொகை பத்தாயிரம். இக்கற்ற என் உயிரின் விலை பத்தாயிரம். ஈவிரக்க மில்லாமல் என்னைக் கொலைசெய்ய ஒப்புக்கொண்ட உங்கள் மனேதிடத்திற்குப் பரிசு பத்தாயிரம். நீதியை நேர்வழி செல்ல ஒட்டாமல் தடுக்க, அவன் ஏவிவிட்ட அநீதிக்கு அவன் தந்த மதிப்பு பத்தாயிரம். எனது தந்தையின் சொத்தைக் கொள்ளையடிக்க என்னைக் கொன்று, என் கல்லறைமேல் அவன் வைக்கப்போகும்

காணிக்கை பத்தாயிரம். ஊரார் சொத்துக்கு உரிமை கொண்டாட உங்களுக்குத் தர மனமார ஒப்புக் கொண்ட தொகை பத்தாயிரம். நான் பதினையாயிரம் கொடுத்தால்?

**வீரன்:** வேலப்பரையே கொன்றுவிடுவோம்.

**சுகுணா:** பனைமேலும் ஈட்டிக்கு இரண்டு முனைகள்.

**வீரன்:** அம்மா. அதையெல்லாம் பேசிகிட்டிருக்க இப்பொ நேரமில்லையம்மா. ஏதாவது உனக்கு இஷ்ட மானதைச் சொல்லிக்கொள்.

**சுகுணா:** அந்த அளவுக்காவது தயவு செய்தீர்களே! அதுவே போதும், ஏழைக்கேதப்பா தேவதை, அனு தைக்கேதப்பா ஆண்டவன்.

*[என்று சுகுணா சொல்லி முடிவதற்குள் மறைவில் மாறு வேடத்திலிருந்த குலசேகரன் கொலையாளி களின் காலில் சுட்டு விடுகின்றான்]*

**சுகுணா:** இந்த ஆபத்தான நேரத்தில் என்னைக் காப்பாற்றிய தாங்கள் யார்?

## காட்சி 10

## ரோடு

**குலசேகரன்:** காலம் வரும், பதில் சொல்கின்றேன். மதியை விடாதே - விதி உன்னை பயங்காட்டும் விஷக்கிருமி.

இந்தா இந்த விலாசத்தில் கொஞ்சநாள்வரை யிலும் தலைமறைவாயிரு. உன்னை யாரும் கண்டு கொள்ளக் கூடாது.

*குடியானவன் மாறன் வீட்டிலிருந்து குழந்தையோடு வெளியே புறப்பட்ட மல்லிகா - பக்கத்துஊருக்குப்போகிருள். அந்தஊரில் பிழைப்பில்லாமல் தவிக்கும் தாசி சாரதா என்பவள் கண்ணில் படுகிருள். மல்லிகாவை வைத்து மைனர்களை வரவழைத்து அதன்மூலம் பிழைக்கலாமென மாய வலையை வீசி மல்லிகாவைத் தன் வீட்டுக்கழைத்துச் செல்கிருள்.*

**சாரதா:** யாரம்மா நீ, எங்கே போகிருய்? யாரையாவது பார்க்கவேண்டுமா?

**மல்லிகா:** நான் யாரையும் பார்க்க வேண்டியதில்லை.

**சார:** பிறகு எங்கேதனியாகப் போய்க்கொண்டிருக்கின்ருய்?

**மல்:** நான் ஓர் அனுதை.

**சார:** உம், நீ அப்படிச் சொல்லலாமா? உலகத்தில் மனிதர்களே இல்லாமல் போனுல்தானே ஒருவர் அனுதையாக முடியும்.

**மல்:** நான் யாரையும் எதிர்பார்க்கவில்லை. சாவு ஒன்றையே எதிர்பார்க்கின்றேன்.

**சார:** நீ அந்த முடிவுக்கு வரலாம். ஆனுல் உன் குழந்தையின் முகத்தைப்பார்க்க வேண்டாமா?

**மல்:** அதற்காக நான் கவலைப்பட்டு என்ன பயன்?

**சார:** நான் கவலைப்படுகிறேன். அது வளரும் வரையிலாவது நீ கஷ்டப்பட்டுத்தானே தீரவேண்டும், அதை அனுதையாக விடலாமா? அதுவும் ஆண் குழந்தை.

**மல்:** இவ்வளவு பரோபகாரமாகப் பேசுகிறவர்களில் உன்னைத்தானம்மா முதலில் பார்த்தேன். நீ யாரம்மா?

**சார:** நான் இந்த ஊர்தான். பிரபல வியாபாரியின் மனைவி, அவர் இறந்துவிட்டார். எனக்குக் குழந்தையுமில்லே குட்டியுமில்லே. நான் தனியாகத்தான் இருக்கின்றேன். சாப்பாட்டுக்குக் குறைவில்லே. ஏதோ அரைவயத்துக் கஞ்சிக்கு வைத்து விட்டுத்தான் போனார். பணம் இருந்து என்னம்மா பயன்? ஜனம் இருக்கவேண்டாமா? நீ என் வீட்டுக்கு வந்தா சுகமா இருக்கலாம்.

*[மல்லிகா மயங்குகின்றாள்.]*

**சார:** ஏன் மயங்குகிறாய்? - கரும்பு தின்னக்கூலியா வேண்டும்? உன் இஷ்டம் இருக்கிற வரையிலும் இருக்கலாம், இல்லே, போயிடலாம்.

*[மல்லிகாவைப் பக்குவமாக வீட்டுக்கழைத்துக்கொண்டு போய்விடுகிறாள்.*

**காட்சி 11**

## தாசி சாரதா வீடு

*மல்லிகா கூடத்தைச் சுற்றிப் பார்க்கின்றாள். அங்கே மாட்டப்பட்டிருக்கும் படங்களைப்பார்த்துத் தாசி வீடாக இருக்குமோ என்று சந்தேகப்படுகிறாள்.*

*தாசி, குழந்தையை அன்பாக வளர்ப்பதைப் போலப் பாவனை செய்கிறாள்.*

*மல்லிகாவை மிக அழகாகச் சிங்காரித்து வைக்கிறாள். அன்றிரவு தன் கணவன் இறந்த நாளாகையால் அவன் படத்துக்குப் பூஜைபோட்டு மல்லிகாவைப் பாடும்படி சொல்கிறாள். மல்லிகாவும் இவள் அன்பைப்பாராட்டி ஒரு பாட்டு பாட ஆரம்பித்துப் பாடிக்கொண்டே இருக்கும்போது*

*குழந்தையை எடுத்துக்கொண்டு சாரதா வெளியே வந்து — வெளிப்பக்கம் தாழ்ப்பாள் போட்டுக் கொள்ளுகின்றுள்.*

*மல்லிகா இதைக் கவனிக்காமலே பாடிக்கொண்டிருக்கின்றுள்.*

*திரைமறைவிலிருந்த மைனர் வைரமாணிக்கம் வெளியே வந்து மல்லிகாவின் புறமாக நிற்கின்றுன்.*

*மல்லிகா பாட்டு முடிந்தவுடன் எழுந்து நிற்கிருள்.]*

**வைரமாணிக்கம் :** என்ன நேர்த்தி! நிறுத்திவிட்டாயே? இன்னும் பாடு.

*[மல்லிகா திடுக்கிட்டுத் திரும்பிப் பார்க்கிருள், வைரமாணிக்கம் நிற்கிருன்]*

**மல்லிகா :** நீ யார்?

**வைர :** ரொம்பொ அநாகரிகமான கேள்வி. வண்டைப் பார்த்த நறுமலர் நீ யார்? என்று கேட்கும், வானம் முகிலைப் பார்த்து வராதே என்று சொல்லும், வண்ணத் தாமரையைப் பார்த்துச் சூரியன் மலராதே எனக் கூறும் என்றால் மண்டலமே சிரிக்குமே.

**மல்லி :** போதும். அபாயம். நெருங்காதே! என்ற அறிவிப்பைக் கண்ட பின்பும் மின்சாரக் கம்பிகளைத் தொட்டால்?

**வைர :** இறந்துவிடுவோம்

**மல்லி :** அது தெரிந்தும்?

**வைர:** ஆம். உன்னைத் தொட்டபின் நான் இறப்பதானால் அதைவிட வேறு சுகம் ஏது ?

*[அதற்குள், அவன் போட்டுக்கொண்டிருக்கும் மோதிரத்தை உற்றுப் பார்க்கிறாள்]*

**வைர:** ஏன், என் மோதிரத்தை உற்றுப்பார்க்கிறாய்? வேண்டுமென்று கேளேன். வைர மோதிரம். விலை இரண்டாயிரம். நம் காதலின் காணிக்கையாக இருக்கட்டும்.

*[மல்லிகா முகமலர்ச்சியோடு வாங்குகின்றாள். வாங்கியவுடன் வாயில் போட்டுக் கடிக்கின்றாள்]*

**வைர:** ஐயோ! அதை மெல்லாதே. வைரம் — செத்துப் போவாய். மெல்லாதே. மெல்லாதே. கொலை, கொலை.

*[இந்தச் சப்தத்தைக் கேட்டு உள்ளே என்ன நடக்கிறது என்பதை ஜன்னல் வழியாகப் பார்க்கிறாள் சாரதா.*

*வைர மோதிரத்தை மெல்லுகிறாள். நிச்சயம் இறந்துவிடுவாள் என்று வைரமாணிக்கமும் தாசியும் நினைக்கின்றார்கள்.*

*செத்துவிடுவாய், மெல்லாதே என்று அவன் சொல்லியதைக் கேட்டு மல்லிகா கீழே சாய்கிறாள்.*

*இந்தக் கொலையில் இருந்து தப்பிக்க வைரமாணிக்கமும் வெளியில் ஓடுகிறான். கதவு வெளிப்பக்கம் மூடியிருப்பதால் தட்டுகிறான்.*

*அதற்குள் சாரதா இவனிடத்திலுள்ள மற்ற நகைகளையும் பணத்தையும் பறிக்கவேண்டுமென்று, இவனைப் பயங்காட்ட, போலீஸ், போலீஸ் என்று கத்துகிறாள்.]*

**வைர :** சாரதா. உன்னை கும்பிடறேன்: என்னைக் காட்டிக் கொடுக்காதே. உனக்கு என்னவேணுமோ கேள்! கொடுக்கிறேன்!

**சாரதா :** உன் நகைகளை எல்லாம் கழட்டு. பணத்தை எடு. இந்தா, இதில் ஒரு கையெழுத்து போடு.

*[என்று அவன் நகைகளைக் கழட்டிக்கொண்டு பத்தாயிரத்துக்கு ஒரு ரசிது வாங்கிக்கொண்டு அவனை வெளியே விடுகிறாள். ஓடிவிடுகிறான்.*

*சாரதாவும், இவள் இறந்துவிட்டாள் என்று கருதி, குழந்தையைத் தோட்டத்திலேயே விட்டுவிட்டு வெளியே ஓடிவிடுகிறாள்.*

*இவர்கள் இருவரும் போனபிறகு மெதுவாக மல்லிகா தலையைத் தூக்கிப் பார்க்கிறாள். யாரும் இல்லை. வெளியே வந்து தோட்டத்தின் பூஞ்செடிக்கருகில் விளையாடிக் கொண்டிருக்கும் குழந்தையை எடுத்துக்கொண்டு வெளியே போய்விடுகிறாள்.*

*மல்லிகா குடியானவன் வீட்டில் இருப்பதாகத் தெரிந்துகொண்ட குலசேகரன், குடியானவ மாறப்பன் வீட்டுக்கு வந்து விசாரித்துவிட்டு, அங்கு காணமல் பல தெருக்கள் வழியாகத் தேடிக்கொண்டு வருகிறான்.*

*கடைசியில் கண்டுபிடித்துவிடுவான் என்ற சூழ்நிலையில் ஒரே தெருவில் இரண்டுபேரும் எதிரெதிராக வருகின்றனர்.*

*ஆனால் குலசேகரன் ரசிகனாகையால், அந்தத் தெரு[illegible]ல் நடந்துகொண்டிருந்த ஒரு பாடகன் கச்சேரியில் லயி[illegible]. அதே நேரத்தில் மல்லிகா அந்தக் கூட்டத்தைக் கடந்து செ[illegible]று*

*விடுகிருள். இருவரும் சந்திக்க முடியாமல் போய் விடுகிறது.*

*தாசவிடாய் அதிகரித்த மல்லிகா ஒரு குளத்துக்குப் போய், மண்படிந்த தன் குழந்தையைக் குளிப் பாட்டித், தானும் தண்ணீர் குடிக்கும் நேரத்தில், தாசி வீட்டில் இருந்து ஓடோடி வந்த மைனர் வைரமாணிக்கம் எதிர்க்கரையிலிருந்து இவளைப் பார்த்துவிட்டு இங்கே வருகின்முன்.*

*மல்லிகாதான்-சந்தேகமில்லை. எப்படிப் பிழைத்தாள்-வைர மோதிரமல்ல. தன்னை அரு. ராம. அருணு சலம் அண்டு கம்பெனி வைர மோதிரமென்று ஏமாற்றி விட்டார்கள். போய் அவளை ஒருகை பார்க்கவேண்டும். ஆனுல், அதற்குள், தாசிசாரதா வீட்டில் தான் அடைந்த நஷ்டத்துக்கு ஈடாக, இவள் அணிந்திருக்கும் நகைகளைப் பறிக்க வேண்டுமென்ற திட்டம் போட்டு இவளிடம் நெருங்குகின்முன்.]*

*[இவனைப் பார்த்துவிட்ட மல்லிகா.]*

**மல்லி:** மறுபடியுமா இங்கே வந்தாய்? மனிதனு நீ?

**வைர:** கோபித்துக் கொள்ளாதே. எங்கே போகிருய்? முன்போல் வழிதவறிப் போகப்போகின்ருய் என்று சொல்லவந்தேன்.

**மல்லி:** எனக்கு வழி தெரியும் நீ வழிதவறிப்போய் விடாதே.

**வைர:** எங்கே புறப்பட்டாய்?

**மல்லி:** உலகத்தோடு எனக்கு இனி ஒரு வேலையும் இல்லை, சன்னியாசியாகப் போகப்போகின்றேன்.

[குலுங்கச் சிரிக்கின்றாள்]

மல்லி: என் பிழைப்பு உனக்கும் சிரிப்பாயிருக்கிறதோ?

வைர: உன் பிழைப்பு சிரிப்பாயில்லே? உன் வைராக்கியந் தான் சிரிப்பாயிருககிறது.

மல்லி: ஏன்?

வைர: பூனை பாலே வெறுந்தமாதிரி, நீ வாழ்க்கையைப் வெறுத்துவிட்டாயே என்பதற்காக.

மல்லி: வாழ்க்கை என்றால் என்ன என்று எனக்குத் தெரியும்.

வைர: உம், உம். கொழந்தையெ பார்க்கிறப்போவே தெரியலையா? சன்னியாசினியாகவா போகப்போகிறாய்?

மல்லி: ஆமாம்.

வைர: நம்பமுடியவில்லை.

மல்லி: உன்னைப்போல ஊதாரியா நான்?

வைர: கோபித்துக் கொள்ளாதே. சன்னியாசினியாகப் போகின்றவர்கள் யாரும் இப்படி நகைகளையும் போட்டுக்கொண்டு போகமாட்டார்கள். அதனால் சொன்னேன் வேறொன்றுமில்லை.

மல்லி: அதுவும் உண்மைதான். என் பகைவனாயிருந்தும் நல்ல நேரத்தில் நல்ல யோசனையைச் சொல்லியிருக் கின்றாய். இந்தா எடுத்துக்கொள். என் வாழ்வே மடிந்துவிட்டது. இதனால் எனக்கென்ன ஆகவேண் டியது.

[நகைகளைக் கழற்றி எறிந்துவிட்டு தலையில் வைத்துக் கொண்டிருக்கும் பூவையும் தூக்கிக் கீழே போடு கிறாள்.

*வைரமாணிக்கம் வெகு ஆசையோடு நகைகளை எடுத்துப் பார்க்கின்றுன். எல்லாம் கில்ட்டு நகைகள். பூவையாகிலும் வாசனை பார்க்கலாம் என்று மோந்து பார்க்கின்றுன். அதுவும் காகிதப்பூ. முற்றிலும்ஏமாற்றம். முதலில் தன்னை ஏமாற்றிய ஷராப்புக் கடைக்கு ஓடுகிருன் ஆத்திரத்தோடு.]*

### காட்சி 12

## ஷராப்புக்கடை

*[கடையைத் திறந்து அனைவரும் உட்கார்ந்துகொண்டிருக்கின்றனர். இரண்டொருவர் வியாபாரம் செய்துகொண்டிருக்கின்றனர்.]*

**வைரமாணிக்கம்:** ஏய்! முதலாளி! மரியாதையா கடையெ மூடு. இல்லேன்னு வந்தது ஆபத்து.

**முதலாளி:** ஏம்பா, யாராவது தலைவருங்கோ செத்துட்டாங்களா?

**வைர:** தலைவரும் சாகலே, வாலரும் சாகலே.

**முத:** பின்னெ எதுக்கையா கடையெ மூடச்சொல்றே?

**வைர:** உன் யோக்கியதைக்கு.

**முத:** சும்மா ஒளருதே. விஷயத்தெ சொல்லு. ஒண்ணும் சொல்லாமே இப்படி கலவரம் பண்ணு போலீசுலே புடிச்சிக் குடுத்துடுவேன். தெரியுமா?

**வைர:** வைரமோதிரம்னு இமிடேஷன் மோதிரம் குடுத்து ஏமாத்திட்டே -யேடா, மோசக்காரா?

**முத:** யார்ரா குடுத்தா? எங்கடா அந்த மோதிரம்?

**வைர:** மோதிரம்?

**முத:** ஆமாண்டா, உண்மையாயிருந்தா, மோதிரம் பில்லு இதையெல்லாம் கொடுத்துடு. பணத்தை தலையெ சுத்திப்போட்டறேன். பொறிக்கிகிட்டுபோ. இதுக்கு மேலே ஏதாவது செய்தெ அவ்வளவுதான், கட்டம் போட்ட சொக்கா போட்டுகிட்டுக் கம்பி எண்ணப் போவே தெரியும்மா?

**வைர:** இரு. அதையெல்லாம் கொண்டுவந்து உன்னே ஒரு கைப் பாக்கறேன்.

**முத:** போடா, போ. பாக்கரானும், எத்தனெ பேரே பாக் கறத்துக்கு இங்கே ஒக்காந்திருக்கேன்?

*[மல்லிகா ஒரு கடையில் ஒரு இட்லி வாங்கிப் பையனுக்குக் கொடுக்கப் போகிறாள்.*

*அதைப் பிச்சைக்காரன் ஒருவன் கேட்கின்றான். தாய் போட மறுக்கிறாள்.*

*பையனோ அதில் பாதியைப் புட்டுப் பிச்சைக்காரனுக் குப் போடுகிறான்.*

*பிச்சைக்காரன் கையில் இருக்கும் அந்தப்பாதி இட்லி யைப் பருந்து அடித்துக்கொண்டு போய் விடு கிறது.*

*தலைமேல் பார்க்கிறான். கும்பலாகப் பருந்துகள் பறந்த வண்ணம் உள்ளன.]*

**பிச்சை:** இப்படியும் ஒரு குப்பல் இங்கே உண்டா?

**மல்லி:** இந்தக் கும்பல் எங்கேயும் இருக்கும். எப்பவும் தலைமேல் என்ன இருக்கிறது என்பதைப் பார்த்துக் கொண்டுதான் வேலை செய்யவேண்டும்.

*[பிச்சைக்காரன் போய்விடுகிறான். மல்லிகா குழந் தையை அழைத்துக்கொண்டு மேலும் நடந்து ஒரு வாய்க்கால் கரையில் வைத்து]*

கண்ணே! பாலகர்கள் பாலில்லாமல் வருந்தும் நாட்டில் பாலாபிஷேகம் எவ்வளவடா? என்போன்ற தாய்மார்களிடம் சிக்கிச்சீரழியும் குழந்தைகள் எவ்வளவு? மகனே! உன்னிடம் என் பரிதாப நிலையைச்சொல்வதால் மட்டும் உன் பசியடங்கிவிடப் போகின்றதா? உலகில் எங்கும் தோன்றாத அளவு வள்ளல்கள் நம் நாட்டில்தான் தோன்றினார்கள். அவர்கள் வழிவந்தவர்கள் யாராகிலும் குழந்தைகளுக்குப் பால் பண்ணை வைக்கக்கூடாதா? செல்வமே! திரண்ட தனவந்தர் வீட்டில்தான் பிறந்தேன். இயற்கை என்னைச் செய்த சதியால் நீ பிறந்தாய். உன்னையும் பசியெனும் கொடிய நோய் பழிதீர்த்துக்கொள்ளுமானால், எனக்கிருக்கும் ஆறுதல் என்ற ஒரே விளக்கு அணைந்தமாகிரிதான். தந்தையால் நிராகரிக்கப்பட்டு அனாதைகளாய்த் திரிகிறோம். நாய்க்காகிலும் ஊர் எச்சில் சொந்தமடா. அதுவும் நம்மால் முடியாதடா கண்ணே! வாழ்க்கை வசதியற்று வலிமைக் குன்றிக் கருத்தழிந்த தாய்மார்கள் பெற்ற குழந்தைகளின் கெதி இதுவானால், ஈவிரக்கமில்லா வையகமே! நீயே குற்றவாளி. பெண்களைப் பெறாதே. தவறிப்பிறந்தாலும் தவிக்கவிடாதே.

*[இதையெல்லாம் கேட்டுக்கொண்டே பின்னால் நின்ற மார்த்தாண்டன்.]*

**மார் :** விடமாட்டேன். வனதேவதையே! வருந்தலாமா? ஏதாவது கிழங்கட்டை வருந்தினாலும் அர்த்தமிருக்கிறது. மகுடமுடி மன்னர்களையெல்லாம் செடியின் கொடிபோல் வளையவைக்கும் வனிதாமணி! உன் அழகைக்கண்டு இவ்வையகமே தலைகுனியவேண்டும். முத்துக்களின் உயர்வை நத்தையறியாததைப்போல, மாணிக்கத்தின் மேன்மையை அரவம் அறியாததைப் போல, நீ உன் அழகை அறியாமலிருக்கின்றாய். இதோ என் இளமை என்ற கண்ணாடியில் பார்.

**மல்லி :** இது என்னடா புதுப்புரட்சி, ஆண்டவா?

**மார்:** ஆணுக்குப் பெண் தேவையில்லையென்று அந்த ஆண்டவன்தான் சொல்லட்டுமே?

**மல்லி:** சண்டாளா!

**மார்:** சாக்கடையில் இருக்கும் உன்னை இன்பசாகரத்துக் கழைக்கின்றேனே, இதுவா சண்டாளத்தனம்?

**மல்லி:** திருட்டுத்தனமாக—

**மார்:** எது திருட்டுத்தனம்? மலரின் தேனை வண்டு சுவைப்பது திருடா? மாதர்கள் வனப்பை ஆடவர் சுகிப்பது திருடா? பசித்தவன் புசிப்பது திருடா? பார்வையுள்ளவன் பார்ப்பது திருடா? இது காதல் வியாபாரம் கண்ணே! நம்மிருவருக்கும் நஷ்டமில்லை. கடைசியாகச் சொல்கின்றேன் கேள். ஒன்று, நீ மானத்தைப் பறிகொடுக்க வேண்டும். அல்லது மகனைப் பலியாக்க வேண்டும். எது உனக்குத் தேவை? மானமா? மகனா?

**மல்லி:** அட பாவி! என் மானத்தைக் கொடுக்க மறுத்தால் என் மகனைத் தரவேண்டுமா? உன் காதல் பசிக்கு என் மகன் பலியா?

**மார்:** பெண்ணே! நான் கேட்பது பலியா? இல்லை, இல்லை. அவ்வளவு கொடிய துரோகத்துக்கு ஆளாகமாட்டேன். உன் இதழின் கொவ்வைக்கனி, மனக்கனிவோடு ஓர் அணைப்பு. முகம் சுளிக்காமல் ஓர் முத்தம், அந்தச் சுகத்தை ஏற்கெனவே பார்த்த நீ அதை மறக்காமல் இருக்கப் பள்ளியறையில் ஓர் நாள் ஒத்திகை. இவ்வளவுதான் எனக்குத்தேவை.

**மல்லி:** அவைகளில் ஒன்றையாவது நீ காணமுடியாது. வேண்டுமானால், இறந்த என் மகன், உயிர்போன என் உடல் இந்த இரண்டை வேண்டுமானால் நீ காணலாம்.

**மார்:** காண்பதென்ன? இந்தா இவனைக் கடைசி முறை யாகப் பார்த்துவிடு.

*[என்று குழந்தை கணிக்கண்ணனைத் தூக்கி மல்லிகா வுக்குக் காட்டிவிட்டு ஓடுகிறான். மல்லிகா, எழுந்து அவன் பின்னால் ஓடிக்கொண்டே]*

ஆ! துரோகி குலசேகரா!! உன்னாலல்லவா இவ்வளவு துன்பம். நீ செய்த சதியே என் முடிவு. மாதர்களிடம் இயற்கையாகக் காட்டவேண்டிய பச்சாதாபத்தை இந்தப் பாவி மறந்தேபோய்விட்டான். இளகிய மனமில்லாத இரும்பு நெஞ்சன். இருதயமே இலாத ஈனன். சகோதரி களோடு பிறக்காத சண்டாளன்.

*[குலசேகரன் என்ற பெயரைக் கேட்ட மார்த்தாண் டன் திடுக்கிட்டு குழந்தையை வாய்க்காலில் போடாமல் நிறுத்திக்கொண்டு]*

**மார்:** அம்மா! நீ யார்?

**மல்லி:** நான் ஒரு அனாதை.

**மார்:** பெயர்?

**மல்லி:** மல்லிகா.

**மார்:** ஊர்?

**மல்லி:** பேராவூரணி.

*[மல்லிகா என்னமோ சொல்ல வாயெடுக்கும்போது]*

**மார்:** போதும். குலசேகரனால் துரோகம் செய்யப்பட்டுத் தந்தையால் வெளியேற்றப்பட்டாயல்லவா?

**மல்லி:** ஆம்.

**மார்:** கேள்விப்பட்டிருக்கிறேனே தவிர நேரில் கண்ட தில்லை. ஏதோ இளமையின் கொடுமையால் தவருன உணர்ச்சிகளைக் காட்டிவிட்டேன். மன்னிக்க வேண் டும். எங்கே புறப்பட்டாயம்மா? என்ன உன் எதிர் காலம்?

**மல்லி:** என் வருங்காலமா? போங்காலந்தான். இருண்ட காடு. மிகப் பயங்கரமான பாலைவனம். முட்செடிகள் நிறைந்த புதர். பசி, தாகம், பட்டினி இவைகளே என் தோழர்கள். வறுமை எனக்கு வழிகாட்டி. பெண் கள் சமூகத்தை பழிதீர்க்க வந்த ஆண் சமூகமே! நீங்கள் நிம்மதியாக நீடூழி காலம் வாழுங்கள். இனி யாகிலும் தாய்க் குலத்தைப் பழிக்காதிருங்கள்.

**மார்:** அம்மா! நீ எதற்கும் கவலைப்படாதே. உன் வாழ் வில் இருந்த கஷ்டம் இன்றேடு ஒழிந்தசென்று நினைத்துக்கொள்.

**மல்லி:** மறுபடியும் துரோக சிந்தனையா?

**மார்:** இல்லையம்மா. எந்தக் குலசேகரனல் நீ வஞ்சிக்கப் பட்டாயோ, எந்தத் துரோகியால் உன் வாழ்வு சிதைக் கப்பட்டதோ, எவனுடைய மடத்தனம் உன்னையும், உன் மகனையும் காட்டில் அனதையாகத் திரியச் செய் ததோ, அந்தக் கொடுமையின் பிறப்பிடமாகிய துரோகி குலசேகரனை உன் காலடியில் விழச் செய் கிறேன்.

**மல்லி:** அது உன்னல் முடியாத காரியம்.

**மார்:** மல்லிகா! இவன் மார்த்தாண்டன். நினைவிருக் கட்டும். ஆனல் கொஞ்சநாள் வரையிலும் நான் சொல்வதைக் கேட்டு அதன்படி நட. அதோ தெரி கின்றதே, அது ஓர் அனதை விடுதி. இந்தக் கடிதத் தைக் கொண்டுபோய்க் கொடுத்துப் பையன் கொஞ்சம்

பெரியவனாகின்ற வரையில் கொஞ்சம் கஷ்டங்களைச் சகித்துக்கொண்டிரு. பிறகு நடப்பதைப் பார். வருகிறேன். என் அறியாமையால் செய்த பிழையை மன்னித்தேன் என்று ஒரு வார்த்தை சோல். என் மனம் அமைதி அடையட்டும்.

கலிக்கண்ணன் : மாமா !

மார்த்தி : [illegible] என்னம்மா ?

மல்லி : கலிக்கண்ணன்.

மார்த் : கலிக்கண்ணா ! என்னடா தம்பி வேணும் ?

கலிக் : நாய்க்குட்டி.

மார்த் : புலிக்குட்டி வேண்டுமானாலும் கொண்டுவருகிறேன். பொம்மையாக.

## காட்சி 13

## [அநாதை விடுதி]

*[சில பிள்ளைகள் விளையாடிக்கொண்டிருக்கின்றனர். மணியடிக்கிறது.*

*எல்லாரும் ஒரு ஹாலுக்குள் வந்து நாட்டுப்பண் பாடுகின்றனர்.*

*முடிந்ததும்...அநாதை விடுதியின் தலைவரை மல்லிகா சந்தித்து மார்த்தாண்டன் கொடுத்த கடிதத்தைக் கொடுக்கிறாள்.]*

வி. த. : அம்மா ! நீ யார் ?

மல்லி : நான் ஓர் திக்கற்றவள்.

**வி. த.** : இந்தப் பையன் ?

**மல்லி** : அவனும் அப்படியே.

**வி. த.** : நீங்கள் அனாதைகளாகக் காரணம் ?

**மல்லி** : ஆதரிப்பாரில்லாததால்.

**வி. த.** : பொய். உன் கழுத்தில் தாலி ?

**மல்லி** : அது இருந்தும் இல்லாததே.

**வி. த.** : உன் கணவன் சமீபத்தில்தான் இறந்துவிட்டாரா? இன்னும் கருமாதியாகவில்லையா ? அதற்குள் வெளியே வந்துவிட்டாயே, வரலாமா ?

**மல்லி** : அப்படியும் இல்லை.

**வி. த.** : பிறகு என்னதான் உண்மை ?

**மல்லி** : உங்கள் சந்தேக யூகமே சரியானது.

**வி. த.** : ஓஹோ. அப்படியா. இப்படியும் பெண்களை அலையவைக்கும் சில வேட்டை நாய்களும் இருக்கத்தான் செய்கின்றன.

**மல்லி** : தந்தையே ! இந்த நிலையில் நீர்தான் உதவிசெய்ய வேண்டும்.

**வி. த.** : உன் தாய் தந்தையர்கள்.

**மல்லி** : அவர்களும் என் தவறான செயலுக்கு மன்னிப்பளிக்க மறுத்துவிட்டார்கள்.

**வி. த.** : அதன் விளைவா இது ?

**மல்லி** : ஆமாம்.

**வி. த.** : பையன் பெயர் ?

**மல்லி :** கனிக்கண்ணன்.

**வி. த. :** வயது ?

**மல்லி :** ஐந்து.

**வி. த. :** குலம் ?

**மல்லி :** பொது.

**வி. த. :** சாதி ?

**மல்லி :** கவலைப்படாதவர்கள்.

**வி. த. :** சரி உள்ளே போங்கள்.

## காட்சி 14

## [வேலப்பர் வீடு]

*[வேலப்பர், இந்நேரம் சுகுணா கொலை செய்யப்பட்டிருப்பாள் என்று நினைத்துக்கொண்டு சந்தோஷமாக ஆத்ம கதம் பேசிக்கொண்டிருக்கிறான்.]*

**வேல :** தொலைந்தாள் சுகுணா. செத்தும் சாகாமல் எனக்குத் தொல்லை தந்த தடியாடு. தானமாம், தருமமாம். தானமும் தருமமும் கொள்ளையடிப்பவர்களின் கூட்டு எண்ணம் என்பதை அறியாத பேதை. அப்பன் அமரநாதனின் சொத்திருக்கின்ற மமதையால் ஆணவம் பிடித்தலைந்த பேய். காதல் வார்த்தைகளைக் கனவில் சொல்ல வேண்டுமாம். இப்போது யார் கனவுலகில் சஞ்சரிக்கின்றார்கள் ? மாமன் என்ற மரியாதை இல்லாமல் மட்டித்தனமாகப் பேசிய நாய். வினைக் கொலைகாரர்கள் [illegible]. ஏன்? மாமனைக் கட்டிக்கொண்டு மனம்போல் இங்கே வாழ்ந்தால் என்ன ?

குடி முழுகிவிட்டிருக்குமோ? கிழவனைக் குமரிகள், காதலிப்பதில்லையாம். ஊறுகாய் பழையதுதான் அதை யாரும் புசிப்பதில்லையாம். மகாபலிபுரம் பழைய கட்டிடந்தான். அதைக்கண்டு சிற்பக் கலையைத் தெரிந்து கொள்வதில்லையா? கடல் தோன்றியது யாருக்குமே தெரியாது. அதில் யாருமே பிரயாணம் செய்வதில்லையா? ஒரு செய்தியைத் தெரிந்துகொள்ளப் பழைய நூல்கள் வேண்டும். பழைய விவகாரங்களைத் தெரிந்து கொள்ளப் பெரிய மனிதர்கள் தேவை. காதலுக்கு மாத்திரம் பல நாட்கள் அனுபவம் பெற்ற பெரிய மனிதர்கள் கூடாதாம். என்னுடா காலம் இது! ரொம்ப முன்னேற்றமா இருக்குது. பிறகு யாரிடத்தில்தான் அந்த அருமையான கலையைக் கற்றுக்கொள்ளப் போகின்றார்களாம்? தெரியாதவர்கள் தெரிந்தவர்களிடம் கேட்டுப் பழகித் தெரிந்துகொள்வார்கள் என்று பெயர். இதுகள் என்னுடான்னு பொறந்தவுடனே போதனாசிரியர்களாய்ப் பேர்யிடுதுங்கோ. போகட்டும், நமக்கென்ன? அதுவும் இன்னிக்கி ஒரு வாரம் ஆயிடிச்சி. பொதைச்ச எடத்திலே புல்லு மொளச்சிருக்கும் அந்தக் கொலைகாரப் பையலுங்களையும் காணோம்.

*[வெளியே கோர்ட்டு அமீனா கதவைத் தட்டுகிறான்.]*

**வேல :** யாரது?

**அமீனா :** கோர்ட் ஜவான்.

**வேல :** வாய்யா உள்ளே—என்ன செய்தி?

**அமீனா :** சம்மன் வந்திருக்கு.

**வேல :** ஓகோ. அந்தக் கடன்காரப்பய கந்தசாமி பேர்லே தாவா போட்டோமே, அதுவா?

*[என்று வாங்கிக் கையெழுத்துப் போட்டு அனுப்பி விட்டுச் சம்மனைப் படிக்க ஆரம்பிக்கின்றான்.]*

**வேல :** என்ன! வாதி சுகுணாவா? சுகுணா? அவளைப் புதைத்த இடத்தில் ஒரு புளிய மரமே முளைத்திருக்குமே! சுகுணா என்மேல் வழக்குத் தொடுப்பதா? டேய், மார்த்தாண்டா! காலிப்பயலே. நீ, அவொ மேலே ஆசைவெச்சிருந்தா என்னெ மெறட்டச் சொல்லுதா? ஏன்டா, நீ கட்டிக்கலாம்னு இருந்த சுகுணாவை நான் கட்டிக்கொள்ள எண்ணினேனே அதனாலே இப்படிப் பயங்காட்றையாடா? இப்போ நம்மொடு சேருந்தாண்டா கல்யாணம் பண்ணிக்கோணும். அவொ போயிட்டாடா அந்த லோகம். கதாநாயகி விழிக்க முடியாத தூக்கத்திலாழ்ந்துவிட்டாள். மறுபடியும் எழுந்திருக்க முடியாமல் நிம்மதியாகத் தூங்குகிறாள். ஏய், மார்த்தாண்டா! வேலப்பரை எதிர்த்தால் உன் விலாவில் வேல் பாயும். என் அண்ணன் மகன் என்பதற்காக உன்னை மன்னித்துவிடப் போவதில்லை. மைத்துனன் மகனே! மண்ணைத் தின்றாய். விதி முடிந்த ஒருவன்தான் வேலப்பரை அணுகுவான்.

*[என்று சம்மனைக் கிழித்தெறிகிறான்]*

## காட்சி 15

## ரோடு

**குலசே :** (மாறு வேடத்தில்) சுகுணா! நில், கண்டபடி வெளியே திரியாதே.

**சுகுணா :** தாங்கள்?

**குலசே :** நான் உன் வழிகாட்டி.

**சுகுணா :** அந்தச் சம்மன்?

**குலசே :** போய்ச் சேர்ந்துவிட்

**கருணை :** கோர்ட்டில் என்ன பதில் சொல்லவேண்டும் ?

**குலசே :** கேட்ட கேள்விக்கு நியாயமான பதில் சொல்ல வேண்டும்.

**கருணை :** உம்மைச் சந்தேகங்கள்...?

**குலசே :** கேட்கலாம்.

**கருணை :** இயற்கையின் அளவுகோல் எது?

**குலசே :** கவிஞன் உள்ளம்.

**கருணை :** ஆசையற்றிருப்பது எப்போது?

**குலசே :** இறந்தபிறகு.

**கருணை :** மானிடர்கள் எதை நோக்கி நடந்துகொண்டிருக்கிருர்கள் ?

**குலசே :** மரணத்தை நோக்கி.

**கருணை :** சிறகில்லாத பறவை எது?

**குலசே :** நேரம்.

**கருணை :** ஆணையும் பெண்ணையும் கட்டுப்படுத்துவது எது?

**குலசே :** காதல் அல்லது அன்பு.

**கருணை :** எது இல்லாமல் வாழலாம்?

**குலசே :** பொருமை.

**கருணை :** எப்போதும் இறவாதது?

**குலசே :** புகழ்.

**கருணை :** இப்போதாவது தாங்கள் யார் என்று...?

**குலசே :** காலம் வரும். பதில் சொல்கிறேன்.

*[வேலப்பர் போய்க்கொண்டிருக்கின்றார். பின்னால் இன்ஸ்பெக்டர், போலீஸ்காரர்கள் வாரண்டில் பிடிக்க வருகின்றார்கள்.]*

**இன்ஸ்பெக்டர் :** வேலப்பரே! நில்லும். உம்மைக் கைது செய்திருக்கிறேன்.

**வேல :** அது பிரம்மாவாலேகூட முடியாதுங்களே?

**இன்ஸ் :** என்ன முடியாது?

**வேல :** மனுஷனை பொறந்தவனை கழுதெ ஆக்கிறது.

**இன்ஸ் :** இல்லையா! உம்மெ அரஸ்டு செய்திருக்கிறோம்.

**வேல :** என்னையா! ஏன், எதற்காக? நான் யாரையாவது கொலை செய்தேனா? மோசஞ் செய்தேனா?

**இன்ஸ் :** உஷ் அதுவெல்லாம் எங்களுக்கு ஒன்றும் தெரியாது. முன்னே அனுப்பிய சம்மனுக்கு நீர் ஆஜராக வில்லே. இப்போது வாரண்டு அவ்வளவுதான்.

**வேல :** பெரிய மனுஷனே கொஞ்சம் மரியாதையாத்தான் கூப்பிடக்கூடாதா?

**இன்ஸ் :** அதனால்தான் கையில் விலங்கு போடவில்லே.

**வேல :** ஐயோ, அது வேறே இருக்குதா? இன்ஸ்பெக்டர் ஐயா பட்டு கத்தரிச்ச மாதிரி கட்கட்னு பேசறாரு.

**இன்ஸ் :** ஏய்! என்ன விளையாடுறெ? நடங்காணும்.

**வேல :** முன்னே எதுக்கு சம்மன் கொடுத்திங்கோ?

**இன்ஸ் :** அதுவெல்லாம் எங்களுக்குத் தெரியாது. கோர்ட்டில் வந்து கேட்டுக்கொள்ளும்.

வேல: என்னமோ, இப்போதான் நம்போ மருந்து வேலே செய்ய ஆரம்பிச்சிருக்காப்பலே இருக்கு. போய்தான் பாப்போமே. இவங்களே வீடேறி வந்து கூப்பட்றப் போ நம்போ போகாமே இருக்கிறது அவ்வளவு மரியாதையா?

இன்ஸ்: தயாவிஷயமா ஒண்ணுமில்லேயா. கட்டாயம் வந்துதான் தீரணும், தெரியுமா?

வேல: அடே. இப்போ எதே எடுத்தாலும் கட்டாயம்னே சொல்றுங்கோ.

*[எல்லாரும் போகின்றனர்கள்.]*

## காட்சி 16

## [அறுவை விடுதி]

*[அந்த விடுதியின் கௌரவப்பார்வையாளன் குல சேகரன். அன்று அதைப் பார்வையிடப் போகின்றான்]*

குலசே: உன் பெயரென்ன?

குமரேச: குமரேசன்.

குலசே: மாந்தர் அறிவை எதற்கு ஒப்பிடுகிறார் வள்ளுவர்?

குமரேச: தண்ணீரிலுள்ள தாமரைக்கு ஒப்பிடுகிறார்.

குலசே: அந்தச் செய்யுளைச் சொல்லு.

குமரேச: "வெள்ளத் தனைய மலர்நீட்டம் மாந்தர்தம் உள்ளத் தனைய துயர்வு."

குலசே: அதன் பொருளைச் சொல் கண்ணு.

**கணிக் :** எப்படித் தடாகத்தில் தண்ணீர் உயர உயர தாமரை மலர் உயருமோ, அதைப்போல மாந்தர் ஊக்கம் பெருகப் பெருக அவர்கள் வாழ்க்கையில் பெருமையும் உயரும்.

**குலசே :** பேஷ். உன் பெயரென்ன ?

**கணிக் :** கணிக்கண்ணன்.

**குலசே :** உன் தகப்பனுர் பெயர் ?

**கணிக் :** தெரியாது.

**குலசே :** தாயின் பெயர் ?

**கணிக் :** தெரியாது.

**குலசே :** தாய் தகப்பன் பெயர் தெரியாதவனுடா நீ ?

*[என்று சொல்லிக்கொண்டே அவன் கழுத்தில் கட்டித் தொங்கவிடப்பட்டிருக்கும் பில்லையைப் படிக்கின்ருன். அதில்,*

*துரோகி குலசேகரன் மகன் கணிக்கண்ணன் என்று எழுதப்பட்டிருக்கிறது. அதைக்குனிந்து படித்து முடிப்பதற்குள், கணிக்கண்ணன் குலசேகரன் தவடையில் படாரென்று அடித்து விடுகின்ருன்.]*

*குலசேகரன் கண்களில் நீர் கலங்க வெளியே புறப்படும் போது*

*இதை எல்லாம் பார்த்துக் கொண்டிருந்த அறை விடுதியின் தலைவர்,]*

**வி. த :** துஷ்டா ! என்ன துணிகரம் செய்தாய் ? தறுதலை பெற்ற மகனே ! தகப்பனை இன்னுனெனத் தெரியாத

முட்டாள். எந்தக் கழுதையோ இப்படிப்பட்ட முட்டாள் பிள்ளையைப் பெற்றுவிட்டு எங்கேயோ பராரி யாய்ப் போய்விட்டானோ ?

**குலசே :** ஆசிரியர் அவர்களே! ஆத்திரப்படாதீர்கள். என்னமோ தெரியாமல் செய்துவிட்டான். நமது குழந்தைகள் இப்படிச் செய்தால் இன்பமாகக் கருது வோமல்லவா ?

**வி. த :** அப்படியானாலும் இது நம் குழந்தையா? எந்தக் கழுதையோ பெற்றபிள்ளை. இன்று இவனை மன்னித்து விட்டோமானால் நாளை எல்லாரும் சேர்ந்து புரட்சி நடத்துவார்களே ?

**குலசே :** போகட்டும் எனக்காக அவனை மன்னித்துவிடுங் கள். "இன்னா செய்தாரை ஒறுத்தல் அவர் நாண நன்னயம் செய்துவிடல்," என்ற பொய்யாப் பெருந் தகை வள்ளுவரின் வாய்மொழி தாங்கள் அறி யாததா ?

## காட்சி 17

## கோர்ட்டு

### வேலப்பர் விசாரணை

*[இன்ஸ்பெக்டர், போலீஸ், நீதிபதி, ஜுரர்கள், வக்கீல் வடமலை, வக்கீல் வாஞ்சிநாதர், கூண்டில் வேலப்பர்.]*

**வாஞ்சிநாதர் :** உம் பெயரென்ன ?

**வேலப்பர் :** வேலப்பர்.

**வாஞ்சி :** 'சத்தியமாகச் சொல்கிறேன்' என்று சொல்லும்.

**வேல:** சத்தியமாகச் சொல்கிறேன்.

**வாஞ்சி:** காலஞ்சென்ற அமரநாதர் உமக்கென்ன வேண்டும்?

**வேல:** என் மைத்துனர்.

**வாஞ்சி:** அவருக்கு ஒரு மகள்....?

**வேல:** சுகுணா என்ற பெயருடையவள் இருந்தாள்.

**வாஞ்சி:** ஏன், இப்போதில்லையா?

**வேல:** தெரியாது.

**வாஞ்சி:** அமரநாதர் இறக்கும்போது, அவர் குடும்ப சொத்துக்களைப்பற்றிய செட்டில்மெண்டு பத்திரத்தைத் தங்களிடம் கொடுத்தாரா?

**வேல:** ஆம்.

**வாஞ்சி:** சுகுணாவுக்கு அந்தப் பத்திரத்தில் கண்ட நிலைமையை விளக்கினீரா?

**வேல:** விளக்கினேன்.

**வாஞ்சி:** உங்கள் மறுமணத்தைப்பற்றி நீங்கள் என்ன முடிவுக்கு வந்தீர்கள்?

**வேல:** முதலில் அவளை மறுமணம் செய்துகொண்டு பிறக்கும் குழந்தைக்கே அந்தச் சொத்துக்களை எழுதி வைத்துவிடலாம் என எண்ணினேன். ஆனால் அவள் மறுத்துவிட்டாள்.

**வாஞ்சி:** உம்! பிறகு.

**வேல:** பிறகு, வேறோர் கள்ளக்காதலனோடு சேர்ந்துகொண்டு என்னிடம் இருக்கும் சொத்துக்களை வாங்க என்னை மணம் செய்துகொள்வதாகப் பாசாங்கு செய்தாள்.

**வக்கீல் வடமலை:** பகிரங்கக் கோர்ட்டில் என் கட்சிக்காரி யாகிய சுகுணவை ஒருவித ஆதாரமுமில்லாமல் ஒழுக் கங்கெட்டவள் என்பதை நான் பலமாக ஆட்சேபிக் கிறேன்.

**வாஞ்சி:** என் நண்பர் மன்னிக்கவேண்டும். தன் முதல் மனைவி மலடியாயிருந்ததற்காக இரண்டாவது மணம் செய்துகொள்ள ஏற்பட்ட சந்தர்ப்பத்தை விளக்கு கின்றார் வேலப்பர்.

**வடமலை:** பெண்கள் மாத்திரம் மலடிகளல்ல. ஆண் களிலும் சிலர் மலடர்களாயிருக்கின்றார்கள். அந்த இரண்டாவது பிரிவில் சேர்ந்தவராயிருக்கலாம் உமது கட்சிக்காரர்.

**வாஞ்சி:** நண்பருக்கு டாக்டர் வேலையும் தெரியும் போலிருக்கு.

**வடமலை:** இதை நான் பலமாகக் கண்டிக்கிறேன்.

**நீதிபதி:** (குறுக்கிட்டு) Proceed and draw the facts.

**வாஞ்சி:** Yes my lord. சுகுண எங்கே இருக்கிறாள் என்று தெரியுமா?

**வேல:** தெரியாது?

**வடமலை:** தேட முயற்சிக்கவில்லையா?

**வேல:** இல்லை.

**வாஞ்சி:** சரி. இப்போது சுகுணவைத் திருமணம் செய்து கொள்வீரா?

**வேல:** செய்துகொள்வேன்.

*[கோர்ட்டில் கொலைகார நொண்டிகளை அழைத்து]*

**வடமலை:** இவர்கள் யாரென்று உங்களுக்குத் தெரியுமா?

**தொண்டி:** தெரியும்.

**வடமலை:** இவர் பெயர் என்ன?

**தொண்டி:** வேலப்பர்.

**வடமலை:** சுமார் மூன்று மாதங்களுக்கு முன்பு இவர் உங்களிடம் பத்தாயிரம் ரூபாய் கொடுத்ததுண்டா?

**தொண்டி:** ஆமாங்கோ.

**வடமலை:** எதற்காகக் கொடுத்தார்?

**தொண்டி:** (விழித்து) கொலை செய்வதற்காகக் கொடுத்தார்.

**வடமலை:** நீங்கள் கொலை செய்யக் கொண்டுபோன ஆணா? பெண்ணா?

**தொண்டி:** பெண்.

**வடமலை:** அந்தப்பெண் யாரென்று உங்களுக்குத்தெரியுமா?

**தொண்டி:** தெரியாது.

*[இதற்குள் வேலப்பர் எதையோ சொல்ல வாயெடுக்கும் போது]*

**வடமலை:** போதும் நிறுத்தும். கனம் கோர்ட்டார் அவர்களே! இவன் ஓர் கொலை செய்யத் தூண்டிய குற்றவாளி.

**வாஞ்சி:** தக்க ஆதாரமில்லாமல் எதையும் பேசலாம் என்பது நீதிக்கு விரோதமானது.

**வடமலை:** என் நண்பர் நீதியைப்பற்றித் தெரிந்து கொண்ட அதே சட்டக் கல்லூரியில்தான் நானும் பயின்றேன்.

**வாஞ்சி:** என் கட்சிக்காரராகிய வேலப்பர் மிகப் பெரிய மனிதர். கௌரவக்குடி.

**வடமலை:** வயதில், அதை ஆட்சேபிக்கவில்லை. ஆனால் அயோக்கியத்தனத்தின் மொத்த வியாபாரியே இவர் தான்.

**வாஞ்சி:** ஒன்றுமே சரியாகத் தெரிந்து கொள்ளாமல் அயோக்கியர் என்ற பதப் பிரயோகத்தை நான் ஆட்சேபிக்கின்றேன். இது நீதி மன்றம்.

**வடமலை:** எனக்கும் தெரியும், இது நீதி மன்றம் என்று. அயோக்கியர்களைத் திருத்தி நல்வழிப்படுத்துவதற் காகத்தான் சட்டங்கள் இருக்கின்றன. கொலை காரர்களையும் கொள்ளைக்காரர்களையும் வக்கீல்களின் வாதப்பிரதிவாதங்களென்ற கவசத்தால் மறைப்ப தற்காக அல்ல. இதுவரை விசாரித்த சாட்சிகளைக் கொண்டே நண்பர் வக்கீல் அவர்கள் உண்மையைத் தெரிந்து கொள்ளவில்லையானால், அவர் காதுகளைக் கொஞ்சம் பழுது பார்த்துக்கொள்வது நல்லது.

**வாஞ்சி:** [ தன் காதைப் பிடித்துக்கொண்டு, ] என்ன சொல்றீங்கோ ?

**வடமலை:** ஆ ... அதைத்தான் கொஞ்சம் ரிப்பேர் செய்து கொள்ளச் சொல்லுகிறேன்,

**கனம் பொருந்திய நீதிபதியவர்களே ! ஜுரர்களே! இதோ நிற்கும் இந்தச் சாட்சிகள், விசாரணை செய்யப் படும் இவர்கள், வேலப்பர் கள்ளச் சாராயம் காய்ச்சி வியாபாரம் செய்யத்தொடங்கிய நாள்முதல் அவருக் குத் துணைபுரிந்திருக்கின்றார்கள். அது சம்பந்தமாக இவர்கள் இருவரும் புலிவலம்என்ற இடத்தில் பிடிபட் டுத் தலா மூன்று மாத வெறுங்காவல் தண்டனையடைந்**

திருக்கின்றார்கள். விடுதலையடைந்து வெளிவந்த வுடன் மீண்டும் வேலப்பரின் கையாளாய்ச் சுகுணை வைக் கொல்லப் பத்தாயிரம் ரூபாய் பெற்றுக்கொண்டு சுகுணைவைக் கொலைக்களம் கொண்டுவந்தவுடன் யாரோ பின்பக்கமாக இருந்து இவர்கள் இருவரை யும் காலில் சுட, அதனால் ஏற்பட்ட காயங்களுடன் பல நாட்கள் சிகிச்சை செய்யப்பட்டு இன்று பிரஸ் தாப வழக்கின் அப்ருவர்களாகக் கொண்டுவந்து நிறுத்தப்பட்டிருக்கின்றார்கள். அவர்கள் சொல்லிய சாட்சியங்களையும் கேட்டீர்கள். தீர விசாரித்துத் தக்க நீதி வழங்க வேண்டுமாய்க் கேட்டுக்கொள்கிறன்.

**வாதி:** கனம் பொருந்திய நீதிபதியவர்களே! ஜுரர்களே! என் கட்சிக்காரராகிய வேலப்பர், இறந்த அமரநாத ரின் சொத்துக்களை அபகரிக்கும் அளவுக்கு அவ்வளவு ஏழையல்ல. இறந்த அமரநாதர் எழுதிவைத்த செட்டில்மெண்டு பத்திரத்தில் கண்ட ஷரத்துப்படி, மணம் செய்துகொள்ள முழு உரிமையளித்த அமர நாதர், வேலப்பரின் குணகுணங்களை ஆராயாமல் செய்திருக்கமாட்டார். வேலப்பரின் கிழப் பருவத்தை எண்ணி மறுமணம் செய்துகொள்ள மனமில்லாத சுகுணை, யாரையோ காதலித்து அவன் துணைகொண்டு வேலப்பரைச் சதிசெய்யவே இப்படிச்செய்திருக்கிருள். மேலும் சுகுணைவைத் திருமணம் செய்துகொண்டு, இறந்த அமரநாதரின் உயிரைச் சாந்தி உலகுக்கு அனுப்ப முற்பட்ட வேலப்பரின் செய்கை, எவ்வகை யிலும், பத்திரத்தில் கண்ட ஷரத்துக்களுக்கு முர ணானதல்ல. இதை விடுத்துப் பிரேதமில்லாமல்; பிரேத பரிசோதனை யில்லாமல், பிரேத விசாரணை ரிகார்டுகள் இல்லாமல், போலீஸ் புலனில்லாமல், வெறும சாட்சிகளையே ஆதாரமாகக் கொண்டு, என் கட்சிக்காரரைக கொலை செய்யத்தூண்டிய குற்றத் துக்கு ஆளாக்கியதை நான் ஆட்சேபிக்கிறேன்

**வடமலை :** கனம் நீதிபதியவர்களே! ஜூரர்களே! மதிப்புக் குரிய எதிர்க்கட்சி வழக்கறிஞர் சொல்லிய அவ்வளவையும் நான் மறுக்கிறேன்.

இறந்த அமரநாதர், சொத்துக்களைப்பற்றி ஏதாவது சொல்லியிருக்கலாமேயன்றித், தன் மகள் யாரைத் திருமணம் செய்து கொள்ள வேண்டும் என்று வரையறுத்திருக்க வேண்டியதில்லை.

மேலும், மகள் வேலப்பரைத் திருமணம் செய்து கொள்ள மறுத்தால் ஆன்மா சாந்தி யடையாது என்று எழுதி வைத்திருக்கின்றாரே தவிர, வேலப்பர் மறுத்தால் என்ன நிலைமை என்பதைப்பற்றி விளக்கவேயில்லை.

**வேல :** நான் மறுக்கவில்லை.

**வடமலை :** உண்மைதானா?

**வேல :** ஆம்.

*[மறைவாய் நிறுத்தி வைக்கப்பட்டிருந்த சுகுணாவை முன்னுக்கு வரச்சொல்லி]*

**வடமலை :** இதோ! சுகுணா. நன்றாகப் பாருங்கள். கண்களைக் கண்ணீரால் கழுவி நன்றாகப் பாருங்கள். அன்று தாங்கள் கொலை செய்துவிடும்படி, கொலையாளிகளோடு அனுப்பிய சுகுணா இவள் தானே?

கோர்ட்டார் அவர்களே! இதோ இந்தச் சுகுணாவைத்தான் இந்தப் பெரியமனிதர், இந்தக் கொலையாளிகளை விட்டுக் கொலை செய்யும்படி ஏவினார். இறந்த அமரநாதரின் மகளும், அவர் எழுதிய செட்டில்மெண்டில் கண்ட சட்டப்படிக்கான வாரிசும், பிரஸ்தாப வழக்கின் வாதியுமான சுகுணா இந்த அம்மாளேதான்.

வேலப்பரே! ஏன் விழிக்கின்றீர்? இவர்தானே நன்றாகப் பார்த்தீரா? நிரபராதி ஒருத்தியை, அதிலும் தந்தை இறக்கும்போது மைனராயிருந்தவளை, பணத் தாசையால் பாதாளத்தில் தள்ள இருந்த பரிதாப பிம்பமே! ஊரார் பொருளுக்கு உரிமை கொண்டாட உலகறியா மாதை உயிர் முடிக்க எண்ணிய ஊதாரியே! பாரும். ஏன் விழிக்கின்றீர்?

கனம் கோர்ட்டார் அவர்களே!

*[என்று சொல்வதற்குள், வேலப்பர், சுகுணா! சுகுணா!! என்று அலறிக் கூண்டிலேயே ரத்தம் கக்கி இறந்து விடுகிறார்.]*

*[கோர்ட்டு கலைகிறது]*

*[பிணத்தைத் தூக்கும்போது]*

**தலையாரி:** வாய்யா கலியாண மாப்பிள்ளே! வெறட்டைக் கலியாணம் செய்துக்குங்கோ.

*[என்று பிணத்தைத் தூக்கிக்கொண்டு போய் விடுகின்றார்கள்]*

*[இதைத் தூக்கிக்கொண்டு போகும்போது வாழ்க்கை நிலையாமை, யாரையும் வஞ்சிக்காமல் இருத்தல், ஆகிய கருத்துக்களடங்கிய பாட்டு ஒன்று பாடிக் கொண்டிருந்த இரண்டு நொண்டிகளையும் சிறைச் சாலையில் அடைத்து விடுதல்]*

## காட்சி 18

## சிறைச்சாலை

*[சிறைக் கைதிகள் இரண்டு பேரும் பேசிக்கொள்ளு கின்றார்கள்]*

**மாறன்:** இருண்ட சிறைவாசம். ஐயோ இந்தப் பாழும் சிறை எவ்வளவோ சிந்தனையாளர்களை, சீர்திருத்த

வாதிகளை, அரசியல் தலைவர்களை, புரட்சிக்காரர்களை, இம்சைப்படுத்தி யிருக்கின்றதே!

**வீரன் :** அதுமாத்திரமா? எவ்வளவோ சீர்திருத்தவாதிகள் தங்கள் ஆராய்ச்சியை நடத்தி வெற்றி பெற்றிருக்கின்றார்களே. ஏகாதிபத்தியங்களை எதிர்த்துத் தமது தூய வாழ்க்கையை இந்தத் துருப்பிடித்த கம்பிகளுக்குள்ளே கழித்தவர்கள் எவ்வளவு பேர்?

**மாறன் :** வாலிபத்தில் உள்ளே நுழைந்து வயோதிகத்தில் கோலூன்றி வெளியே வந்தவர்கள் எவ்வளவு பேர்? சமுதாயம் தன் அறியாமையால் செய்த துரோகத்தை எதிர்த்துத் தூக்குத் தண்டனையடைந்தவர்கள் எவ்வளவு பேர்? அவர்களெல்லாம் தியாகிகள். நம்மைப் போன்ற ஈனர்களல்ல. படு, மனமே! படு, உனக்கு இதுவும் வேண்டும், இன்னமும் வேண்டும்.

*[சிறைக்காவலன் சோளக்கஞ்சியைக் கொண்டுவந்து கொடுக்கின்றான்]*

**வீரன் :** அட கடவுளே! சோளக் கஞ்சியா!

**மாறன் :** டேய்! ஏண்டா சலிச்சிக்கிறே. நம்பொமாத்திரம் சோளக் கஞ்சியெ குடிக்கிலேடா. வெளியே இருக்கிறவங்கொ கூட தாண்டா சோள ரொட்டியைத் திங்கராங்கோ. அவங்களுக்கும் நம்பளுக்கும் என்னடா வித்தியாசம்? குறுக்கே இந்த 10, 15 கம்பிகள் தானேடா?

**வீரன் :** நம்பொ வீட்டே, என்ன இவ்வளவு பிரமாதமா கட்டியிருக்கு?

**மாறன் :** வெளியே இருக்கிறவங்களாவது ராத்திரியிலே அவங்களே கதவெ மூடிக்கிட்டுத் தூங்கணும். நமக்கு அப்படியில்லே. நம்பளுக்கு ஒரு ஆளு இருக்கு,

கதவெ மூடவும், திறக்கவும், நம்பளுக்கு எல்லா வேலெ செய்ரதுக்கும் ஆளு.

**வீரன் :** (பக்கத்து அறையிலே இருக்கும் மற்றோர் கைதியைப் பார்த்து)

ஏம்பா. நீ எதுக்கு வந்தே?

**ப. சி. கை :** அது ஏங் கேட்கிறீங்கோ. குடிசைத்தொழில் செய்தேன். அதனாலே புடிச்சுக்கிட்டு வந்துட்டாங்கோ.

**வீரன் :** ஏய், புளுவறையே. குடிசைத்தொழில் செஞ்சா எங்கேயாவது புடிச்சுக்கிட்டு வந்துடுவாங்களாடா? நிசமா சொல்லு.

**ப. சி. கை :** எண்ணே, சாராயம் காய்ச்சறது குடிசைத் தொழில் இல்லையாண்ணே.

**மாறன் :** ஏண்டா அது குடிசைத் தொழிலா?

**வீரன் :** வேறென்ன?

*[அதற்குள் வேறோர் சிறைக்கைதி அப்பக்கம் வருகிறான்]*

**மாறன் :** ஏய் புண்ணியவானே! நீ எதுக்கு ஜெயிலுக்கு வந்தே?

**வே. சி. கை :** ஒரு நாளு ரொம்பொ பனியா இருந்தது அண்ணே! முக்காடு போட்டுக்கிட்டுப் போனேன், அவ்வளவுதான் இங்கே வந்துட்டேன்.

**சிறையதி :** டேய். என்னடா கூச்சல்? சும்மா இருக்க மாட்டிங்கோ?

**வீரன் :** வெளியே சும்மா இல்லாமேதான் இங்கே வந்தமே. இன்னும் இங்கே சும்மா இல்லாமே போனா வேறெ எங்கே போகப்போறோம்?

**சிறைபதி:** கொலைகாரப்பைடதுங்கோ என்ன தைரியண்டா உங்களுக்கு?

**மாறன்:** இல்லேன்னு, நாங்கோ ஏன் கொலை செய்யப் போறோம்?

**சிறைபதி:** முதுவுத் தோலே பிச்சுடுவேன்?

**வீரன்:** கசாப்பு கடையிலே யிருக்க வேண்டியவர், எப்படியோ வழிதவறி இங்கே வந்துட்டாரோ?

**மாறன்:** டேய், வீரா! இப்போ நம்போ விடுதலையாய் வெளியேபோனு, ஜனங்களுக்கு என்னடா சொல்றது?

**வீரன்:** ஏண்டா ஜெயிலுக்குப் போனேண்ணு கேட்கப் போகிருன். ஒரே ஒரு பதில்?

**மாறன்:** என்னு?

**வீரன்:** தந்திக் கம்பியெ அறுத்தேன். இவன் தபாலாபீசெ கொளுத்தினன், அவ்வளவுதான். ஒருபய மூச்சு விட மாட்டான்

**மாறன்:** தியாகசோபரத்துக்கு இது தான்டா முதல்படி. தெரியுமா?

காட்சி 19

## ரேடியோ செய்தி நிலையம்

**குலசேகரன்:** என்னப்பா மார்த்தாண்டா! சுகுண வழக்கெல்லாம் ஒரு மாதிரியா தீர்ந்தாப்பலே இருக்கு?

**மார்த்:** உம்...தீர்ந்தது. ஆனல், இன்னும் ஒண்ணுதான் தீர்லே?

**குலசே:** அது என்னப்பா?

**மார்த்:** திருமணம்.

**குலசே:** யாருக்கு?

**மார்த்:** சகுணுவுக்கு.

**குலசே:** மாப்பிள்ளையார்?

**மார்த்:** யாரா இருப்பாங்கா? இவருதான். (என்று தன்னையே சுட்டிக்காட்டிக் கொள்ளுகிறன்.)

**குலசே:** நீயா? எண்டாப்பா, முன்னையே உம்மேலெ Love இல்லேன்னே?

**மார்த்:** முன்னேயா? அந்தக் கிழவரு இருந்தாரு அப்போ சொன்னேன்.

**குலசே:** கிழவரு இப்போ என்ன ஆனரு?

**மார்த்:** பிரயாணமாயிட்டாரு.

**குலசே:** எங்கே?

**மார்த்:** யாரும் போகும் இடத்துக்குத்தான்.

**குலசே:** அது எந்த எடம்பா?

**மார்த்:** சுடுகாட்டுக்கு.

**குலசே:** அடெடெ! எப்படி செத்தாரு?

**மார்த்:** என்னுப்பா பேப்பர்லே எல்லாம் அடிபட்டுது அந்தச் செய்தி. ஏன் நீ பேப்பரே பார்க்கறதில்லையா?

**குலசே:** கொஞ்சநாளா பாக்கிறதையே விட்டுட்டேன். என்னு ஒரு சில பேப்பர்லே உண்மையே வர்ரதில்லே. 20 பேரு கூட்டத்துக்கு வந்திருப்பாங்கோ. அதை மூணுசைபர் கூட்டி 20000 பேருன்னு எழுதுவாங்கோ.

பேசுகிற தலைவருங்கோ கேள்விக்குப் பதில் சொல்லாமே விழிப்பாங்கோ. கூட்டத்தில், கேள்விக்குப் பதில்னு கூச்சல் வரும். அதைக் காலிகள் கலாட்டான்னு எழுதுவாங்கோ. ஏதாவதொரு பெரிய தப்பு செய்வாங்கோ, அதை மறைக்க, அளவு கடந்த செல்வாக்கு, மக்கள் பேராதரவு' மக்கள் குதூகுலம் என்றெல்லாம் எழுதுவாங்கோ. துரோகியே திரும்பிப் போன்னு சொல்லியிருப்பாங்கோ. அதை, மக்கள் ஆடம்பரமாக வரவேற்றார்கள், என்று எழுதுவாங்கோ. பொதுமக்களே கிளர்ச்சி செய்வார்கள். அதைத் தனக்கு வேண்டாத எதிர்க்கட்சிகாரர்கள்மேல் சுமத்திவிடுவார்கள், இன்னும் சில பத்திரிகைகள் மிக மோசமாக, மட்டரகமாக. காலித்தனமாக கண்டபடி எழுதி, கொலைவரையிலும் போய் முடிந்திருக்கிறது. அப்பனே பத்திரிகை என்றாலே பயமாயிருக்குது ஒரு சிலர் இருக்கின்றார்கள், அவர்களைப் பற்றி என்ன எழுதினாலும், அவர்கள் சட்டை செய்வதே இல்லை. அந்த வகையில் நான் பத்திரிகைகளைப் பார்த்துப் பார்ததுச் சலித்து விட்டேன். உம் வேலப்பர் சேதி இப்படியா முடிஞ்சுது. ரொம்ப நல்லவராச்சே பாவம்.

**மார்த் :** ஆமாம், ரொம்ப நல்லவருதான். என்னமோ அவரு இருக்கப் போயி, ரெண்டொரு மழைதுளியாவது வீழ்ந்தது. இனிமே ரத்த மழை தான் பெய்யும்.

**குலசே :** இப்போ காதல் நாடகத்தின் கடைசி கட்டத்தெ ஆரம்பிச்சிருக்கேன்னு சொல்லு.

**மார்த் :** ஆமாம்.

**குலசே :** அப்படியிருந்தாலும், அவள் உன்னைக் காதலிப்பாள் என்று நான் நினைக்கவில்லை.

**மார்த் :** ஏன் அதை அவ்வளவு உறுதியாகச் சொல்றே. நீ ஏதாவது போட்டிக் கடை ஆரம்பித்திருக்கிறாயா? அல்லது Black Market வியாபாரம் ஏதாவது... ... ... ?

**குலசே:** சேச்சே. சுத்த அற்பண்டா நீ. தன்னைக் காதலிக்காத ஒருத்தியைக் கட்டாயப்படுத்துவது இன்பத்தின் ஏணியல்ல. அவளைத் துன்பக் கடலில் கொண்டுபோய்ச் சேர்க்கும் தோணி. உன்னைக் காதலித்தாளா ?

**மார்த்:** ஏன் இப்போது இருவரும் காதலித்துத்தான் எல்லாக் கல்யாணமும் நடக்கிறதோ ?

**குலசே:** யாரோ அப்படிச் செய்துகொள்ளுகிறார்கள் என்பதற்காக நாமும் அப்படிச் செய்வதா என்ன ? நீ என்றாவது உன் நிலைமையை அவளுக்குத் தெரிவித்தாயா ?

கண்ணால் தெரிவித்தாயா ? காகிதத்தில் தெரிவித்தாயா ? கையால் தெரிவித்தாயா ? எப்படியப்பா தெரிவித்தாய் ?

**மார்த்:** மூன்று வகையாலும் தெரிவித்தேன்.

**குலசே:** ஏதாவது பதில் கிடைத்ததா ?

**மார்த்:** No Reply. அவள் நிலைமை ஒன்றும் தெரியவில்லை.

**குலசே:** மறுபடியும் அதற்காக முயற்சிக்கவில்லையா ?

**மார்த்:** இன்று நேரில் பார்க்கும் தொடக்க விழா.

**குலசே:** தோல்வியுற்றால் ?

**மார்த்:** நீதான் துணை.

**குலசே:** என்னடா அது, நமக்குச் சரியான உத்தியோகம் கொடுக்கிறே.

**மார்த்:** தோழனுக்கு எந்த வேலை செய்தாலும் கேவலம் இல்லேப்பா.

**குலசே:** நான் முயற்சித்தும் முடியவில்லை என்று வைத்துக் கொள். அப்பொழுது என்ன செய்வது ?

**மார்த் :** குலசேகரா ! என் குணம் உனக்கு நன்ருகத் தெரிந்திருந்தும் கொஞ்ச நேரத்தில் என்னைக் கோழையாக்கி விட்டாய்.

**குலசே :** வீரம் காதலுக்கு உதவாதப்பா. நயம், நல்ல பேச்சு, நளினமான நடை, அந்த நடையிலும் ஒரு கவர்ச்சி, இவை எல்லாம் அடங்கியிருக்க வேண்டும். உன் வீரம் பட்டாளத்திற்கு உதவும். பாவையிடத்தி லல்ல. எவ்வளவோ வீராதி வீரர்கள், [illegible] மேதாவிகள், புரட்சி வீரர்களெல்லாம் எங்கே? பு[illegible] கை கட்டி நின்ருர்கள். நீ சிங்கமாயிருக்கலாம். சிங்கத்தின் உடலிலும் சில நேரம் குளிர்ச்சியான ரத்தம் ஓடும். ஆனல் ஒன்று தாமரை சுருங்கியிருப்பதால் சந்திரன் சுடுகின்றது என்று அர்த்தமில்லை.

**மார்த் :** மணக்க மறுத்தால், அவள் மறு உலகம்.

**குலசே :** டேய், டேய் ! பிறகு நீ விதவையாய் [illegible] எடுத்த எடுப்பிலேயே டஸ்புஸ்னு போடாதே. போய்ப் பாரு, போறதும் போறெ வீட்டுக்கு வந்து கொஞ்சம் டிபன் சாப்பிட்டுப்போ. என்னமோ நல்ல [illegible] காகப் போறே.

*[என்று வீட்டுக்கழைத்துக் கொண்டுபோய் இவனுக்குப் பலகாரத்தைக் கொடுத்துவிட்டு, தான் ஒரு சைக்கிள் எடுத்துக்கொண்டு மாறுவேடத்தோடு சுகுண வீட்டுக்கு ஓடி, ஒரு கைத்துப்பாக்கியையும் ஒரு கடிதத்தையும் கொடுத்துவிட்டுத் திரும்பிவிடுகிருன்.]*

**சுகுண :** அந்தக் கடிதத்தை வாசிக்க .... .... ....

சுகுண ! இது முதற்கொண்டு உன் உயிர் ஒவ்வொரு வினடியும் ஆபத்திலிருப்பதால் இந்தக்

கைத்துப்பாக்கியை உனக்குக் கொடுத்திருக்கின்றேன். உன் உயிருக்கு, அல்லது கற்பிற்கு யாராவது பங்கம் விளைவிக்க எண்ணினால் இதனால் சுட்டு விடு. ஆனால், ஒன்று. காற்று உள்ளே போகாமல் கைக்குட்டையால் மூக்கை மூடிக்கொள். பிறகு நான் வந்து பார்த்துக்கொள்கிறேன்.

சுகு: எனக்குத் தெரியும்? இனிமேல் என்னென்ன ஆபத்துகளோ! யார் கண்டார்கள்? வருவது வரட்டும். நாம் இருக்கிறோம். நமக்குத் துணையாக இந்தத் துப்பாக்கி இருக்கிறது.

*[இதையெல்லாம் ஒட்டுக் கேட்டுக்கொண்டிருந்த மார்த்தாண்டன் முன்னே வந்து]*

எல்லாவற்றிற்கும் துணையாக நான் இருக்கிறேன்.

சுகு: மிஸ்டர்! யாரையும் கேட்காமல் உள்ளே தடதட வென்று வருகின்றீரே கொஞ்சங்கூட மசன் லை தெரியாமல்.

மார்த்: எங்கள் மாமா வீட்டுக்குவர நான் யாரைக் கேட்க வேண்டும்.

சுகு: யாரையும் கேட்கவேண்டியதில்லையா?

மார்த்: காதலர்களைக் கேட்டா, தென்றல் வரும்?

சுகு: ஓஹோ! நீ ஒரு தென்றல், நான் ஒரு........?

மார்த்: முகில் சந்திரனை மறைத்தால்.

சுகு: மறைத்தால் என்ன, கொஞ்ச நேரம். பிறகு நீங்கி விடுகிறது. என்ன அஸ்திவாரம் பலமாயிருக்கிறது, கொத்தரே?

மார்த்: கட்டிடம் ஆட்டங் கொடுக்காமல் இருக்க. அஸ்திவாரமே! ஆட்டங்கொடுத்துக் கொண்டிருக்கின்றதே. அதைத் தாங்க ஒரு தூணாக இருக்கலாமே என்றுதான்.

சுகுணு: ஸ்ரீரங்கம் ஆயிரக்கால் மண்டபத்தில் எத்தனையோ தூண்கள் இல்லாமே இருக்கு. அதிலே ஒரு தூணைப் போய் நிற்கலாமே. மரியாதையாக வெளியே போகின்ருயா இல்லையா?

மார்த்: நான் அவ்வளவு கல்நெஞ்சனு? உன்னைத் தனியாக விட்டுவிட்டுப் போவேனு? ஒரு ஆளை இப்படிப் பேசுகிருயே?

சுகுணு: நீ ஆணு இருந்தால்தானே?

மார்த்: அடிப்படையிலேயே சந்தேகம் வந்துவிட்டதா? அதைக்கேட்க எனக்கே வெட்கமாயிருக்கிறது.

சுகுணு: உன்னைப் பார்க்கவே எனக்கு வெட்கமாயிருக்கு.

மார்த்: அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு, என்பவைகளின் பிறப்பிடமல்லவா நீங்கள்? அதை எல்லாம் இப்போது கொஞ்சம் மாற்றிக்கொள்ளவேண்டும். அச்சம் என்ற ஒரு பொருளிலா பச்சைக்கிளியே!

சுகுணு: சீ, வெளியேபோ. தனியாக இருக்கின்றேன் என்ற அச்சங் கொஞ்சங்கூட இல்லாமல்.

மார்த்: தனியாகப் பேசவேண்டிய விஷயம் என்றுதான் நீ தனியாக இருக்கும்போது நானும் தனியாக வந்தேன். இல்லையானல் ஒரு பத்துப்பேரே அழைச்சிக்கிட்டு வந்திருக்க மாட்டேனு சுகுணு? நீ தவருக அர்த்தம் செய்து கொண்டாய். வண்டுகளை மலர்கள் 'வா வா' என்று அழைக்கும்? "பெண் தனியாக இருந்தாள் என்று" ஏதேதோ பேசிவிட்டாய். ஆண் தனியாக வந்தால் நீ மாத்திரம் எதை வேண்டுமானுலும் பேசிவிடலாம். சேவல் கூவவில்லை என்பதற்காகச் சூர்யன் வராமல் இருப்பதில்லை.

**சுகுணு:** இப்படி எல்லாம் பேசிப் பெண்களை ஏமாற்றிய காலம் மலையேறிப் போச்சு.

**மார்த்:** ஏன் இப்போது பணம் இருக்க வேண்டும் என்கிருயா?

**சுகுணு:** அதுவும் எனக்குத் தேவையில்லை.

**மார்த்:** பிறகு உனக்கு இப்போது என்னதான் தேவை.

**சுகுணு:** உடனே நீ வெளியேற வேண்டும். அது தான் எனக்கு தேவை.

**மார்த்:** போகாவிட்டால்?

**சுகுணு:** இதோ, (என்று கைத்துப்பாக்கியைக் காட்டி One, Two, Three என்று சொல்லும்போது கசரத் செய்பவனைப் போல கைகளை உயர்த்தியும் தாழ்த்தியும் வேடிக்கை செய்துகொண்டிருக்கும்போது, மார்த்தாண்டனைச் சுட்டுவிடுகிருள்.)

*[மார்த்தாண்டன் கீழே விழுந்து விடுகிருன்]*

**சுகுணு:** கொலை! கொலை!! சண்டாள மார்த்தாண்டன் கொலை!!! என்னைக் கற்பழிக்க வந்த காதகன் கொலை. இதுவே பல வாலிபர்களுக்கு நல்ல பாடமாக இருக்கட்டும். வேலைப்பரைக் கொலைகாரன் என்று தீர்ப்பளித்த நீதிமன்றம் எனக்கும் அதே தீர்ப்பளிக்கப் போகின்றது. மரண வெள்ளத்தில் மார்த்தாண்டன். குற்றவாளிக் கூண்டில் நான். குவலயம் கண்டு நகைக்க, ஒரு பேதைப்பெண் தன்னைக் காப்பாற்றிக் கொள்ள, ஒரு ஆண் மகனைக் கொன்றுவிட்டாள் என்ற பழிச்சொல் பெண்ணுலகைச் சார்ந்துவிட்டது. சாராது. தன் உயிரைக் காப்பாற்றிக்கொள்ள அல்ல, தன் கற்பைக் காப்பாற்ற என்றெண்ணும்போது. நமக்கிருந்த ஒரே ஒரு தற்காப்பு வழி இதுதான். என்னை

எவ்வளவோ ஆபத்துக்களிலிருந்து காப்பாற்றிய முதியோன் இந்தத் தீவினைக்கு என்ன செய்யமுடியும்? "அஞ்சாதே' என ஆறுதல் சொல்வார் யார்?

*[இதையெல்லாம் மறைவிலிருந்து பார்த்துக் கொண்டிருந்த குலசேகரன்]*

**குலசே:** அஞ்சாதே! சுகுணா. வேலப்பர் கொலைவாயிலிருந்து தப்புவித்த உன்னைக் கொலைக்குற்றம் சுமத்திக் காட்டிக் கொடுக்க மாட்டேன். நான் அவ்வளவு கொடியவனல்ல. கொஞ்சம் நேரம் அவனுக்கு மயக்கமாக இருக்கும். அவ்வளவுதான். அது ஒரு மயக்க மருந்து. அதனால் உயிருக்கோ, உடலுக்கோ ஆபத்தொன்றுமில்லை. இன்னும் கொஞ்ச நேரத்தில் மயக்கம் தெளிந்து எழுந்து ஓடப் போகிறான் பார். அது வரையிலும் மறைந்திரு.

*[மார்த்தாண்டன் எழுந்தவுடன் மறுபடியும் ஒரு வேட்டுச் சத்தம் எழுப்புகின்றார்கள். மார்த்தாண்டன் ஓடிவிடுகிறான்]*

**சுகுணா:** (குலசேகரனைப் பார்த்து) இப்போதாவது தாங்கள் யார் என்று சொல்லக்கூடாதா?

**குலசே:** அடுத்த முறை.

**சுகுணா:** இந்த முறை தப்பித்துக்கொண்டு போனால்தானே அடுத்த முறை...

**குலசே:** என்ன? என்னையும் பயங்காட்ட ஆரம்பித்து விட்டாய்.

**சுகுணா:** பயங்காட்டிக் கேட்கவில்லை. நயங்காட்டிக் கேட்கின்றேன்.

**குலசே:** நானாக அதைச் சொல்ல விரும்பாதபோது நீயாக அதைத் தெரிந்துகொள்ள ஆசைப்படலாமா?

**சுகுணு:** ஒன்றை அடைய முடியாதபோது, அதன்மேல் ஆசையதிகமாகத் தோன்றுவது இயற்கைதானே.

**குலசே:** இந்த விதி எல்லாவற்றிற்கும் பொருத்தமல்லவா?

**சுகுணு:** ஆமாம், இது பொதுவிதிதான்.

**குலசே:** அப்படியானுல் உன்னை அடைய வேண்டுமென்று நினைத்த மார்த்தாண்டன் ஆசையதிகமானதில் ஆச்சரியமில்லையே. அதற்காக நீ என் கோபித்துக் கொண்டாய்?

**சுகுணு:** அது என் சொந்த விஷயம்.

**குலசே:** பதில் சொல்லத் தெரியாவிட்டால் என் சொந்த விஷயம் என்று சொல்லிவிடுவதா?

**சுகுணு:** ஆமாம். நீர் சொல்லுகின்றீரா இல்லையா?

**குலசே:** சொல்லாவிட்டால்?

**சுகுணு:** இதோ,

*[என்று குலசேகரனையும் சுட்டுவிடுகிருள். கீழே விழுந்து விடுகிருன்.*

*அவன் வேடத்தைக் கலைத்துப் பார்க்கிருள், குலசேகரன்.*

*அண்ணு! என்று அலறியவண்ணம் அவனை ஒரு படுக்கையில் கிடத்தி, மயக்கம் தெளிந்து எழுந்திருக்கும் வரையில் பக்கத்திலிருக்கும் ஒரு நாற்காலியில் உட்கார்ந்திருக்கிருள்.]*

## இவள் மனம்

ஏன் சிந்திக்கின்ருய்? குற்றமொன்றுமில்லை. சந்தேகத்தைத் தீர்த்துக்கொள்ள நீ செய்த முயற்சி. கலங்காதே. விரைவில் துன்பச் சிறையிலிருந்து விடுபடுவாய். உன் இன்ப ஜோதியின்

தொடக்கம். இன்னும் இரண்டோர் சிக்கல். துன்பச் சுமையை இறக்கிய உன் தலையில் ஒரு சிறு துரும்பு. நெடிய கடலை நீந்திவிட்டாய். எதிரில் இருப்பது ஒரு வாய்க்கால். பெரும் புயலுக்குத் தப்பிவிட்டாய். இது பருவக் காற்று. உன்னைச் சூழ்ந்திருந்த சூறுவளி நின்றுவிட்டது. இனி சுகமனுபவிக்கப் போகின்றாய். தெளிவு கொள். துணிவை விடாதே. துப்பாக்கியின் வேலை தீர்ந்தது.

*[இதற்குள்ளே குலசேகரன் விழித்துக்கொள்கிறான்]*

**குலசே:** நான் கற்றுக்கொடுத்த வேலையை, என்னிடமே? உம்...தீட்டிய மரத்தில்......

**சுகுண:** பழமொழி அப்படிச் சொல்வார்களே தவிர, எல்லாரும் தீட்டிய மரத்திலேதான் கூர்பார்ப்பது வழக்கம். பழமொழிக்கும் நடவடிக்கைக்கும் ஒன்றும் சம்பந்தமே இல்லை. எனக்காக எவ்வளவு கஷ்டப்பட்டீர்கள். அப்பேர்ப்பட்ட தியாகி யார் என்று நான் தெரிந்துகொள்ள வேண்டாமா?

**குலசே:** 'தியாகி' எனக்கு அந்த வார்த்தையை உச்சரிக்கவே வெட்கமாயிருக்கிறது. நான் செய்தது தியாகமென்று நீ ஏற்றுக் கொண்டாலும், எத்தியாகத்திலும் சுயநலம் பதுங்கியிருக்கின்றது. தன்னைத் தியாகியென்றும் மற்றவர்களைப் போலிகளென்றும் தூற்றும் பொல்லாதவர்கள் நாட்டிலே மலிந்துவிட்டார்கள். பணக்காரர் பொது நலத்தில் ஈடுபட்டால் பொதுநலமென்பதும், ஏழை அதே பொது வாழ்வில் ஈடுபட்டால் சுயநலமென்பதுமான பொறுமைக் குணம் நமது நாட்டின் சாபக் கேடம்மா.

**சுகுண:** உங்களுக்குச் சுயநலமே இல்லையானல், நீங்கள் எனக்குப் பகிரங்கமாக உதவி செய்திருக்கலாமே?

குலசே : மறைந்திருந்து செய்தால், எதையோ எதிர்பார்த்துச் செய்தேன் என்பது உன் நினைப்பா?

சுகுணா : பிறகு எதற்காக? ஏதாவது என்னிடம் ஊதியம் பெறவா?

குலசே : பரிதாபம், அப்படியானல் இவ்வளவென்று முன்கூட்டியே தீர்மானித்துக் கொண்டிருப்பேனே?

சுகுணா : பிறகு எதற்காக?

குலசே : அதுதான் என் வாழ்க்கையில் அடங்கியிருக்கின்ற ரகசியம்.

சுகுணா : என்ன? நிழல் தந்த மரத்தையே வெட்டி வீழ்த்தியதைப் போன்றதா, உமது வாழ்க்கை?

குலசே : (கண் கலக்கத்தோடு) அம்மா! நான் பாவி. பெண் இனத்துக்குத் துரோகம் செய்த பேதை. வாடாமலரைக் காலடியில் மிதித்த கசடன். திக்கற்ற நிலையிலே ஒருத்தியை நட்டாற்றிலேவிட்ட நயவஞ்சகன். கூரிய வாளுக்கஞ்சி என் கௌரவத்தைக் கைவிட்ட கோழை. ஆண் இனத்துக்குத் தீராப்பழியைத் தேடித்தந்த அயோக்கியன். நான் துரோகத்தின் இருப்பிடம். நயவஞ்சகத்தின் நங்கூரம். நம்பிக்கை மோசத்தின் தாயகம். என் நேசத்துக்காகத் தன் தந்தையையே பகைத்துக்கொண்ட ஒரு தரும உருவத்தின் வாழ்க்கையைச் சிதைத்த சித்ரவதைக்காரன். கொலைகாரனிலும் கொடியவன். அம்மா! சுகுணா, தயவுசெய்து அதைப்பற்றி மாத்திரம் என்னிடம் கேட்காமலிரு. அது ஒன்றே நீ எனக்குச் செய்யும் உதவி.

சுகுணா : அதெப்படி முடியும்? தன் மனதில் தோன்றிய வருத்தங்களைப் பிறரிடம் சொன்னாலன்றி ஆறுதல் பெறமுடியுமா?

குலசே: உண்மைதான். ஆயினும் சொல்ல நாவெழ வில்லை.

சுகுண: அவ்வளவு மனம் குழம்பும் அளவுக்குத் தாங்கள் வாழ்வில் ஏற்பட்ட அதிர்ச்சிதான் என்ன? அது எது வானாலும் சரி, சரிசெய்ய நான் இருக்கிறேன். எனக் காகத் தாங்கள் பட்ட கஷ்டங்கள் ஒரு மலை. இனி நான் எந்த உதவியைத் தங்களுக்குச்செய்தாலும் அது ஒரு துரும்பாகத்தான் இருக்கும். தாங்கள் எனக்காக மீட்டித்தந்த பொருளையே உங்கள் நல்வாழ்வுக்காக அர்ப்பணிக்கின்றேன்.

குலசே: உனக்கு நான் செய்த உதவிகளவ்வளவும் என் கடமையென்றே செய்தேன்.

சுகுண: எது எப்படியிருந்தாலும், நான் உமக்குக் கைம் மாறு செய்தே தீரவேண்டும். இனி நீங்கள் எதையும் மறைக்க நியாயமில்லை.

குலசே உண்மையைச் சொல்வதால் நீ மாத்திரமல்ல, இவ் வுலகமே என்னைத் தூற்றும். அந்த அளவுக்குத் தீராப் பழி தேடிக்கொண்டேன்.

சுகுண: அந்தப்பழி எதுவாயிருந்தாலும் என்னிடம் சொல் லியே தீரவேண்டும். இனி ஒரு நிமிஷம் சொல்லத் தாமதித்தால் என் இருதயமே வெடித்து விடும் போலிருக்கின்றது.

குலசே: அப்படியானால், அதோ............

## நிழல் காட்சி

*[குலசேகரன், தன் பரிதாப நிலையை விளக்கிக் காட்டவும்.]*

சுகுண: அந்த நங்கை யார்?

**குலசே:** அவள்தான் என் அருமைக்காதலி, மல்லிகா

**கருணை:** அவர் யார்?

**குலசே:** அந்தச சண்டாளன்தான் நான்.

**கருணை:** அது என்ன?

**குலசே:** நாடகம் பார்த்துக்கொண்டிருக்கின்றோம்.

**கருணை:** உம் .... பிறகு?

**குலசே:** காதல் கட்டத்தின் தொடக்க நாள். இப்படி வளர்ந்த எங்கள் பிரேமை உருண்டோடிய பல நாட்களில் ஓர் நாள்.

**கருணை:** ஐயோ உங்களைக்கொல்ல வருகின்றானே, கொன்று விட்டானா?

**குலசே:** அந்த ஓர் உதவிதான் செய்யாமல் விட்டு விட்டான்.

**கருணை:** அந்தப் பெரியவர் யார்?

**குலசே:** அவர்தான் மல்லிகாவின் தந்தை. என் மாஜி மாமனார்.

**கருணை:** துப்பாக்கியிலிருந்து குண்டு வெளியேகிளம்பியதா? உங்கள் நெஞ்சைத் துளைத்து விட்டதா?

**குலசே:** எனக்கு உயிர்ப்பிச்சையளித்தான், ஒரு உறுதி மொழியோடு.

**கருணை:** என்ன அந்த உறுதி மொழி?

**குலசே:** மல்லிகாவை மறந்துவிட வேண்டும் என்பது.

**கருணை:** அப்படியே செய்தீரா?

குலசே: ஆம். இதோ இந்த மாமிச மலை. உணர்ச்சியற்ற பொம்மை. உயிருக்கஞ்சி, ஓர் உத்தமப் பெண்ணின் வாழ்வைச் சிதைத்த சண்டாளன். தீமையை நீதி யென்று நினைத்த நாய்.

சுகுண: பிறகு அவள் கதி?

குலசே: நாடோடியானள்.

சுகுண: இப்போது எங்கே இருக்கின்ருள்?

குலசே: உன்னல், அன்று விஷவெடிக்கு ஆளான உத்தம ஞல் காப்பாற்றப்பட்டாள்.

சுகுண: அவ்வளவு நல்லவரா அவர்?

குலசே: ஆம். உன் உயிரோடு ஒட்டப்பட்டிருக்கின்றது அவன் உயிர்.

சுகுண: அவரை நான் மறுபடியும் காணமுடியுமா?

குலசே: நீ அவனைக் காணச் சம்மதித்தாலும், அவன் உன்னைப் பார்க்க விரும்ப மாட்டான்.

சுகுண: ஏன்?

குலசே: நீ சுட்டு விட்டால்?

சுகுண: இல்லை. இனியும் செய்யமாட்டேன், அவர்கள் என்ன ஆனர்கள் என்பதைத் தயவுசெய்து சொல்லுங்கள்.

*[குலசேகரன் கன்னத்தைத் தடவிக் கொண்டே]*

குலசே: காட்டினல் என்ன செய்வாய்?

சுகுண: என்னமோ செய்கிறேன்.

**குலசே:** சரி வா.

*[என்று அழைத்துக் கொண்டுபோய் அறைதை விடுதியிலுள்ள மல்லிகாவையும், மகன் கணிக்கண்ணனையும் காட்டுகின்றான்.]*

**மல்லி:** (குலசேகரனைப் பார்த்தவுடன்) துரோகி! இங்குமா வந்து விட்டாய்? இன்னும் யாரைக்கெடுத்து நடுத் தெருவில் விடப்பார்க்கின்றாய்?

**சுகுண:** அம்மா, அவசரம் வேண்டாம். எதற்காக வந்தார்கள் என்பதைத் தெரிந்து கொள்ளாமலே படபட வென்று பேசுகின்றாயே?

**மல்லிகா:** யாரடி நீ? இந்த மோசக்காரனுக்கு வக்காலத்து வாங்கிப் பேசுகின்றாய்? புது மோகமோ. எனக்கும் அப்படித்தான் இருந்தது ஆரம்பத்தில்.

**சுகுண:** தவறாக எண்ணிவிடாதே. உன் நன்மையைக் கருதியே உன்னைத் தேடிவந்தோம்.

**மல்லி:** எனக்கு இனியும் நல்லகாலமா? கண் கெட்டபின் காட்சி. ஊரார் நகைத்து, உற்றார் தூற்றி, நாடோடி என்று பெயரெடுத்த எனக்கு நல்காலமா? இறந்தவன் மீள்வானா?

**சுகுண:** அம்மா! நீ புதுயுகங் காணப் போகின்றாய்?

**மல்லி:** அம்மா. என்மேல் அவ்வளவு கருணை காட்டுபவர்கள் யாரம்மா? கருணை காட்டவேண்டிய என் தந்தையே என்னைக் கர்ப்பவதி கோலத்தோடு காட்டில் ஓட்டினார். இனி யாரிடம் நான் அந்தக் கருணையை எதிர்பார்க்கப் போகின்றேன்?

**சுகுண:** கலங்காதே. கணவனே மனைவியைக் காட்டுக்கு அனுப்பியிருக்கின்றான். வா வெளியே செல்வோம்.

*[எல்லோரும் வீட்டுக்கு வருகின்றார்கள்.]*

**சுகுண:** அவரைக் காணவில்லை.

**குலசே:** யாரை?

**சுகுண:** அன்று நான்.

**குலசே:** ஓஹோ, அனுகுண்டு வீசினுயே. அவரையா? வந்து விடுவார் கதாநாயகன்.

**சுகுண:** கதாநாயகி யார்?

**குலசே:** அதையும் நீதான் முடிவுகட்டவேண்டும்.

*[இப்படிப் பேசிக்கொண்டே வரும்போது, இறந்த வேலப்பரின் மனைவி கண்ணம்மாள் அழுதுகொண்டே வருகின்றாள்]*

**சுகுண:** வாங்கோ மாமி! ஏன் வீணு அழுதுகிட்டிருக்கிங்கோ. மாமாவுக்கு அவ்வளவுதான் ஆயுசு.

**குலசே:** வீணுக வருத்தப்படாதே அம்மா. இறந்தவர் மீள்வதில்லை. அது ஒன்றுதான் இன்னும் ஆராய்ச்சிக் கடங்காத விஷயம். உன் கணவர் செய்த அடாத செயலுக்கு அதிகாரவர்க்கத்தார் அளிக்கவேண்டிய தண்டனைக்கு முன்புதானே இறந்துவிட்டார். அதுவும் நீதிமன்றத்தில். " நீதிவெல்லும், நிச்சயம் வெல்லும் " என்ற புத்தர்பிரான் பொன்மொழிகள் மெய்ப்பிக்கப் பட்டன.

**கண:** என் கணவன் செய்த குற்றத்துக்காகச் சுகுணுவிடம் மன்னிப்புக் கேட்கவந்தேன்.

**மல்லி:** உன் கணவர் செய்த குற்றத்துக்கு நீ எப்படியம்மா பொறுப்பாளியாவாய்? நீ செய்யும்படி தூண்டினையா?

**கண்:** ஐயோ, எங்கள் தெருக்கோடிப் பிள்ளையார் அறிய நான் தூண்டவில்லையம்மா.

**மல்லி:** பிறகு எதற்காக வருந்துகிறுய்?

**கண்:** பிச்சைக்காசுக்காக கொலே செய்யத் துணிந்தாரே என்பதை நினைக்கும்போது என் நெஞ்சு...

**குலசே:** இது சகஜம். காசுக்காகக் கொலேமாத்திரமல்ல. கொள்கையையே விட்டவர்களுமுண்டு.

**கண்:** இனி என்ன இருக்கின்றது? திக்கற்றவளாகி விட்டேன்.

**குலசே:** ஏன் திக்கில்லே? இந்த உலகம் பரந்திருக்கின்றது. எவ்வளவோ யானேகள் மேயும் காட்டில் இந்த ஆட்டுக்குட்டிகளுக்காத் தழையில்லே. இன்றுதான் உலகத்தின் கடைசி நாளா? அல்லது நாம்தான் உலகத்தின் கடைசீ மனிதர்களா?

**கண்:** என் சொத்துக்களுக்குச் சுகுணவை வார்சாக்கப் போகின்றேன்.

**சுகுண:** வார்சு என்றுலே பயமாயிருக்கிறது. யாருக்கு யார் வாரிசு? பொதுவாக்கி விடு. எனக்கு வேண்டாம். மாமி நாளேக்கி வாருங்கோ. நிதானமா பேசிக்கலாம்.

**கண்;** சுகுண! இப்போதாகிலும் வீட்டுக்கு வரக்கூடாதா?

**குலசே:** ஒரு முடிவா வர்ருேம். வராமெ என்ன?

**கண்:** மார்த்தாண்டனும் உங்களெ பார்க்கவேணும்னு சொன்னுன்.

**குலசே:** ஒரு தரம் பார்த்திருக்கானே?

**கண்:** பார்த்தாண?

**சுகுண:** உம். உம். பார்த்தாரு. இருந்தா வரச்சொல் லுங்கோ.

**கண் :** வரச் சொல்லட்டுமா ?

**சுகுண :** உம்.

[கண்ணம்மாள் போன பின்]

**குலசே :** வேலப்பர் சொத்து வீடு தேடி வருது. கின்டியிலே குதிரை வர்ரமாதிரி. அம்மா சுகுணா, கண்ணம்மாள் சொத்துப் போது. உன் சொத்தை என்ன பண்ணப் போறையோ ?

**சுகுண :** எனக்கேது சொத்து ?

**குலசே :** சொத்து ஏதா ? இது என்னுடையா இது ?

**சுகுண :** சொத்து என்னுதில்லேன்னு சொல்றேன்.

**குலசே :** அடப் பயந்தாங்கொள்ளி! யார்யாரு சொத்தையோ என்னுடையதுதாங்கராங்கோ ரொம்பொபேரு. நீ உன் சொத்தையே உன்னுதின்னு சொல்ல வெட்கப் படறையே. இப்படியும் இருக்குமா உலகம் ? இப்படி சிலபேரு இருக்கிறதால்தான் அப்படிச் சிலபேரு இருக்காங்கொ போலே இருக்கு. பின்னே அது யாருசொத்து?

**சுகுண :** உங்களது.

**குலசே :** என்னுடையதா ?; நான் உங்கப்பாவுக்கு ஸ்வீகார மகனா? எனக்கேதம்மா சொத்து ? எனக்கு நான்தான் சொத்து. மேலே ஆகாயம், கீழே பூமி, மத்தியிலே நான் இருக்கேன். அவ்வளவு தான்.

**சுகுண :** இல்லை. அதைத் தாங்கள் தானே காப்பாற்றிக் கொடுத்தீர்கள் ? அதனால் அது உங்களுடையது என்றேன்.

**குலசே :** அப்படியானால் அது என்னுடையது கூட அல்ல.. இதோ, இந்த மல்லிகாவுடையது. ஏனெனில் அவள்

இல்லாவிட்டால் நான் இந்த வேலையைச் செய்திருக்க வந்திருக்காது.

**மல்லி :** என்னுடையதா? இல்லே. இல்லே. இதோ இந்த கணிக்கண்ணனுடையது. ஏனென்றால், அவன் பிறக்காமல் இருந்திருந்தால் நான் தற்கொலே செய்து கொண்டிருப்பேன். ஆகையால் அவனுடையதுதான்.

**கணிக்க :** சே சே. என்னுடையதல்ல. இதோ நிற்கிருரே, மார்த்தாண்ட மாமா, அவருது. ஏன்னு அவருதான் என்னே கொல்லாமே விட்டுட்டாரே. அதனுலே அவருதுதான்.

**குலசே :** எல்லாம் திருவோடு மகாநாடாகவே சேர்ந்திருக்கிறது. தீர்மானமே பாசாக மாட்டேங்குதே. அப்படியாஞல் ஒன்று செய்வோம.

**கணிக்க :** என்ன செய்வது?

**குலசே :** வேலப்பர் சொத்து, அமரநாதர் சொத்து இரண்டையும் சேர்த்து ஒரு தொழில் நடத்துவோம்.

**மார்த் :** என்ன தொழில் நடத்துவது?

**குலசே :** பஞ்சாலே நடத்தலாம்.

**மார்த்,** அதற்குப் பெயர்?

**சுகுண :** அமரவேலர் பஞ்சாலே. லாப நஷ்டத்தில் ஒவ்வொருவருக்கும் பங்குண்டு. பாட்டாளிகளின் குழந்தைகளுக்கு இலவசப் படிப்பு. குழந்தைகளுக்குப் பால் பண்ணே, பெண்கள் எல்லா வேலேகளுக்கும் அனுமதிக்கப்படுவார்கள். 50-வயதுக்குமேல் ஒய்வு. பாதி பென்ஷன். வாராந்திர விடுமுறை. பொங்கல் விழாவில் பதினேந்து நாட்கள் விடுமுறை.

**மல்லி :** அது சட்ட ரீதியாக்கப்பட வேண்டும்.

**மார்த்:** அயல் நாட்டார் அனுமதிக்கப்பட மாட்டார்கள்.

**குலசே:** பஞ்சு இங்கு உற்பத்தியானல் தேவைபோக மிகுதியைத்தான் வெளிநாட்டுக்கு அனுப்ப முடியும்.

**சுகுண:** இவை செயல் முறையில் இன்னும் 6 மாதங்களில் வரும்.

*[பஞ்சாலை, வேலைக்குப் போகின்றவர்கள் எல்லாம் நிழற் காட்சி.]*

*[ஒருநாள் அனைவரும் உட்கார்ந்துகொண்டு]*

**மார்த்:** இன்று நமது வாழ்நாளில் ஒரு புது நாள். ஏனெனில் அவரவர்கள் ஒருவருக்கொருவர் செய்த நன்மை திமைகளுக்கேற்பப் பரிகாரம் தேடிக்கொள்ளும் நாள்.

**குலசே:** என்னடா மார்த்தாண்டா? ஏதோ புது குண்டு போடுகிருய்?

*[குலசேகரன் காதில் ஏதோ ஓதுகின்றுன் மார்த்தாண்டன்.]*

**குலசே:** ஓஹோ! சுயகாரியப் புலிடா நீ! அப்படியானல் முயற்சி செய்கின்றேன். முன்பெல்லாம் எனக்கு ஏதோ பிரமாதமாக உதவி செய்கின்றேன் என்று சொன்னயே அம்மா சுகுண நினைவிருக்கின்றதா?

**சுகுண:** நன்ருக நினைவிருக்கின்றது.

**குலசே:** அதன்படி செய்ய இன்று மறுக்கமாட்டாயே?

**சுகுண:** இல்லை.

**மார்த்:** மல்லிகா, அன்று உன்னை அறைதை விடுதிக்கு அனுப்பியபோது, என் சொற்படி நடப்பதாகச் சொல்லியது நினைவிருக்கின்றதா?

மல்லி: ஆமாம்.

மார்த்: அப்படிச்செய்ய இப்போதும் தடைசொல்ல மாட்டாயே?

மல்லி: இல்லே.

மார்த்: சரி, அப்படியே இருக்கட்டும். டேய், கணிக் கண்ணு! பள்ளிக்கூடம் போகலே?

கணி. க: இன்னிக்கு பள்ளிக்கூடம் ஏது மாமா?

மார்த். ஞாயிற்றுக்கிழமையா? மேட்னி ஷோவுக்குப் போவையே?

கணி. க: ஆமாம், அதுக்குத்தான் போகலாம்னு இருக் கிறேன்.

மார்த்: அதுக்கும் நேரமாச்சேடா?

கணி. க: இதோ போறேன். என்ன மாமா இன்னிக்கு நீங்களே என்னே சினிமாவுக்குப் போகச்சொல்றீங்கோ?

மார்த்: இல்லே, வாரவாரம் தவறுமே போவையேன்னு கேட்டேன்.

கணி. க: இல்லே, இல்லே, என்னமோ ரகசியம் இருக்குது.

குலசே: அடே, நீ இல்லாமே என்னுடா ரகசியம்?

மல்லி: போகச்சொன்னு போயேன் பொடிக் கழுதே.

கணி. க: கழுதை இப்படியிருக்குமா? ரெண்டு காலும் ரெண்டு கையோடே? சரி நான் போறேன்.

[அவன் போன பின்]

குலசே: சுகுணு, நீ மார்த்தாண்டனைத் திருமணம் செய்து கொள்ளவேண்டும்.

சுகுணு: ஒரு நிபந்தனையின் பேரில்.

மார்த்: மறுபடியும் துப்பாக்கியால் சுடவா?

சுகுண: இல்லே.

குலசே: என்னம்மா நிபந்தனே?

சுகுண: மறுபடியும் தாங்கள் மல்லிகாவுடன் வாழ்க்கை நடத்தவேண்டும்.

மல்லி: மறுபடியுமா?

குலசே: மல்லிகா, மன்னிக்கவேண்டும். நான் உனக்குத் துரோகம் இழைத்தது உண்மைதான். ஆனல், அதற்காக நான் வருந்தியதும், கணிக்கண்ணன் கையால் அறை வாங்கியதும் நீ அறியமாட்டாய்.

மல்லி: மகன் கையால் அடிபட்டீரா?

குலசே: ஆம்.

மல்லி: எங்கே?

மார்த்: அனுதை விடுதியில்.

மல்லி: பிறகு?

மார்த்: பிறகென்ன, மகன் பாசத்தால் மௌனமாயிருந்து விட்டார்.

குலசே: அதனல் ஏற்பட்ட வேதனேயின் விளேவாகவே உன் போன்ற ஓர் பெண்ணுக்கு ஒருவித உதவியும் எதிர்பாராமல் மாறுவேடத்தோடு உதவி செய்துவந்தேன். அன்று முதல் இன்றுவரை எங்களுக்குள் எந்தவித தவருன எண்ணங்களும் தோன்றியதில்லே. சுகுண என் தங்கை. நான் அண்ணன். இப்படியே பழகியிருக்கின்ருேம். நான் சுகுணவைச் சந்தித்த பல கட்டங்களில் கிழவனுகவே காட்சியளித்திருக்கின்றேன்.

மார்த்: இப்போ கிழவனே மாத்திரம் எங்கே விடுகின்ருர்கள். அவர்களுக்கும் ஆபத்துதான்.

சுகுண: தவறை உணர்ந்து நடப்பவர்கள் தரணியிலே மிகச் சொற்பம்.

மல்லி : அதைவிட மிகச் சொற்பமாகவே இருப்பார்கள் அதைப் பகிரங்கமாக ஒப்புக் கொள்பவர்கள்.

மார்த் : அதைவிட மிகக் குறைவானவர்கள் அதை வெளியே சொல்பவர்கள்.

குலசே : வெளியே சொல்வதோடு வேதனைப்படுபவர்கள் அதற்காகக் கழுவாய் தேடுபவர்கள் எங்கையோ இரண்டொருவர்தான்.

மார்த் : ஆமாம், அதில் குலசேகரனையும் சேர்த்துக் கொள்ளலாம்.

[மல்லிகா மௌனம்]

குலசே : ஏன் இவ்வளவு தூரம்? வழிதவறி நடப்பவனை நல்வழிப்படுத்தப் பெண்குலத்துக்கு வல்லமை உண்டு என்று மல்லிகா நம்பினால் என்னை ஏற்றுக்கொள்ளட்டும். இல்லையானால், என்னை ஏற்றுக்கொள்ள எவ்வளவோ மரங்களும் கேணிகளும் உண்டு.

மார்த் : அடெட்டே, அது, பேடித்தனமப்பா. வாழ்க்கையெனும் கயிறால் இருதயம் எனும் வெடிமருந்து வெடிக்காமல் பார்த்துக்கொள்ள வேண்டும். மல்லிகா! இனி அவன் பொறுமையைச் சோதித்துப் பயனில்லை.

மல்லிகா—குலசேகரன் திருமணம்.

சுகுணா—மார்த்தாண்டன் திருமணம்.

எனக்கெப்போ திருமணம்? என்று கேட்டுக்கொண்டே பையன் உள்ளே வருகிறான்.

நல்முடிவு.

---